உ

சிவமயம்

# பிள்ளையார்பட்டி
# அருள்மிகு
# கற்பக விநாயகர்
# பிள்ளைத்தமிழ்





ஆக்கம்:

'வரகவி'

அள. சித. சொ.

தேவராஜன் செட்டியார்

காரைக்குடி.

உ

சிவமயம்

# பிள்ளையார்பட்டி
# அருள்மிகு கற்பக விநாயகர்
# பிள்ளைத்தமிழ்

ஆக்கம்:

'வரகவி'

அள. சித. சொ. தேவராஜன் செட்டியார்

**திருமண வெளியீடு**

இடம் : காரைக்குடி.

மணநாள் : 24-4-2002.

காரைக்குடி

அள. சித. சொ. தெ.

சொக்கலிங்கம் செட்டியார் மகன்

தேவராஜன் B.Sc.Tech.,

தேவகோட்டை

அரு.ச. சுப.சோம. பழ.

ரெத்தினசபாபதி செட்டியார் மகள்

இலக்குமி B.Com.

ஆகியோரின் திருமணத்தில் வழங்கப்பெற்றது.

# முன்னுரை

பொன்னம் பலவன் பொலன்சீர் அடிபரவிப்
பொன்னம் பலமடத்தின் போதகனா – மன்னுந்
திரு நந்தி யான சிதம்பரவேள் பாத
அரவிந்தம் எங்கட் கரண்.

பிள்ளையார்பட்டி அருள்மிகு கற்பகவிநாயகர் பிள்ளைத்தமிழ் என்னும் இந்நூலின் ஆசிரியர் 'வரகவி' அள. சித. சொ. தேவராஜன் செட்டியார் அவர்கள் என் தந்தையார் ஆவார்கள். அவர்கள் சிறந்த தமிழறிஞர்; குருவின்றி தாமே தமிழ் பயின்று புலமை பெற்றவர்கள். தமிழ்க் கடல் இராய. சொ. வாகீச கலாநிதி கி. வா. ஜ. போன்ற தமிழறிஞர்களுக்கு நன்கு பழக்கமானவர்கள். இந்திய விடுதலைப் போராட்டத்தின் போது, நேதாஜி அமைத்த இந்திய தேசிய இராணுவத்தில் (I.N.A.) லெப்டினென்டாகப் பணிபுரிந்தவர்கள். நேதாஜியின் பாராட்டைப் பெற்றவர்கள். பண்டித ஜவகர்லால் நேரு அவர்கள் மலேயா வந்து ஒரு கூட்டத்தில் சொற்பொழிவாற்றிய போது அவரது ஆங்கில சொற்பொழிவை தமிழில் மொழி பெயர்த்து பேசியிருக்கிறார்கள்.

என் தந்தையார் சிறந்த சிவபூஜைச் செல்வர். பாலகவி இராமநாதன் செட்டியார் அவர்களிடம் சிவதீட்சை பெற்றவர்கள். என் தந்தையாரின் பாட்டனார் சிதம்பரம் பொன்னம்பல சுவாமிகள் மடாலயத்தில் நந்தி உருவில் வீற்றிருக்கும் ஸ்ரீலஸ்ரீ சிதம்பர ஞான தேசிகர் ஆவார்கள். என் தந்தையார் நாட்டுப்பற்றும் மொழிப்பற்றும் மிக்கவர்கள்; ஆடம்பரம் இன்றி எளிமையாக வாழ்ந்த நிறை குணச்செல்வர்.

இந்நூலுக்கு பொற்கிழிக் கவிஞர் காசிஸ்ரீ அரு. சோமசுந்தரம் அவர்களும் பேராசிரியர் மா. கண்ணப்பன் அவர்களும் அணிந்துரை அளித்திருக்கிறார்கள். கண்டனூர் மகாகவி பேராசிரியர் அர. சிங்காரவடிவேலன் (எ) அரசி சாற்றுகவி அளித்திருக்கிறார்கள். இந்நூலுக்கு அணிந்துரை மற்றும் சாற்றுகவி வழங்கிய அறிஞர் பெருமக்களுக்கும், இந்நூலை நல்லமுறையில் அச்சிட்ட மெய்யப்பன் ஆப்செட் பிரிண்டர்ஸ் உரிமையாளர் இராம. மெய்யப்பன் அவர்களுக்கும் என் இதயம் கனிந்த நன்றி.

இப்படிக்கு,

*அள. சித. சொ. தே. சொக்கலிங்கம்*

---

நூல் ஆசிரியர் பற்றிய குறிப்பு:

பெயர் : **சொ. தேவராஜன் செட்டியார்**

பிறந்ததேதி: **23-5-1921.**

படிப்பு : பள்ளி இறுதித்தேர்வு காரைக்குடி மீ.சு. உயர்நிலைப் பள்ளியில்.
இடைநிலைத் தேர்வு புதுக்கோட்டை மன்னர் கல்லூரியில்

குடும்பம் பெற்றோர்கள்;:

அள. சித. சொ. சொக்கலிங்கம் செட்டியார்

சொ. மீனாட்சி என்ற கல்யாணி ஆச்சி

மக்கள்:

*தே. சொக்கலிங்கம்* *தே. கருப்பஞ்செட்டி*

*தே. சிதம்பரம்* *லெ. சிகப்பி*

நாட்டுப்பணி : 1943 -இல் நேதாஜி அமைத்த இந்திய தேசிய இராணுவத்தில் சேர்ந்து லெப்டினெண்டாக பணி புரிந்திருக்கிறார்கள். நேதாஜியின் பரிசும் பாராட்டும் பெற்றவர்கள். நேருஜி மலேயா வந்தபோது அவர்களின் ஆங்கில உரையை தமிழில் மொழிபெயர்த்து பேசியிருக்கிறார்கள். இந்திய விடுதலைப் போராட்டத்தில் கலந்து கொண்டதற்காக தமிழக அரசு தாமிரப் பட்டயம் வழங்கி கௌரவித்திருக்கிறது.

ஆன்மீகம் : சிவபூஜைச் செல்வர்; தத்புருஷ தேசிகர் பாலகவி வே. இராமநாதன் செட்டியார் அவர்களிடம் சிவதீட்சை பெற்றவர்கள். நாளும் தவறாது சிவபூஜை செய்வார்கள். நூலாசிரியரின் பாட்டனார், சிதம்பரம் பொன்னம்பல சுவாமிகள் மடாலயத்தில் நந்தி உருவில் வீற்றிருக்கும் ஸ்ரீலஸ்ரீ சிதம்பர ஞான தேசிகர் ஆவார்கள்.

தமிழ்ப்பணி: சிறந்த தமிழறிஞர்; குருவின்றி தமிழ் நூல்களை தாமே பயின்று புலமை பெற்றவர்கள்.

## அவர்கள் ஆக்கிய நூல்கள்

1. கொப்புடையம்மன் திருப்பள்ளியெழுச்சி
2. கொப்புடையம்மன் உயிர் வருக்க மாலை
3. கொப்புடையம்மன் திருவருள் வேட்டல்
4. கொப்புடையம்மன் பிள்ளைத்தமிழ்
5. கொப்புடையம்மன் திருவருள் மாலை
6. கொப்புடையம்மன் இரட்டை மணிமாலை
7. நாடியம்மன் திருவருட் பாமாலை.
8. நாடியம்மன் நவமணி மாலை
9. காளியம்மன் துதி

10. சிதம்பரேசர் பதிகம்
11. படைவீட்டுப் பதிகம்
12. ஜெயங்கொண்டார் பதிகம்
13. செங்கிடாய்க் கறுப்பர் துதிமாலை
14. காரைக்குடி நாகநாதபுரம் கோயில்கள் தெய்வப்பாமாலை
15. இளங்கோவன் பிள்ளைத் தமிழ்
16. கற்பக விநாயகர் பிள்ளைத்தமிழ்
17. காரைக்குடியில் ஆறு இடங்களில் தனிக்கோயில் கொண்டிருக்கும் விநாயகர் பேரில் பாடல்கள்
18. நகரக் கோயிற் பதிகங்கள். (90 பாடல்கள்)

தமிழ் கடல் இராய. சொ. வாகீச கலாநிதி கி. வா. ஜ. போன்ற தமிழ் அறிஞர்களுடன் தொடர்பு கொண்டவர்கள்; அவர்களால் பாராட்டப்பெற்றவர்கள். கோவிலூர் ஆதீன கர்த்தர்கள் ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர ஞான தேசிகர், இராமநாத ஞான தேசிகர் (9–வது பட்டம்) இராமநாத ஞான தேசிகர் (10 வது பட்டம்) ஆகியோரின் அருளாசி பெற்றவர்கள். இராமநாத ஞான தேசிகர் (9–வது பட்டம்) இறை வணக்கப் பாமாலை என்ற நூலக்கு அணிந்துரை அளித்திருக்கிறார்கள்.



## பொற்கிழிக் கவிஞர் காசி ஸ்ரீ அரு. சோம சுந்தரன் அவர்களின் அணிந்துரை.

காரைக்குடி "வரகவி" அள. சித. சொ. தேவராசன் செட்டியார் அவர்கள் இயற்றியுள்ள அற்புதமான "பிள்ளையார்பட்டி ஸ்ரீ கற்பக விநாயகர் பிள்ளைத்தமிழ்" என்ற நூல் முழுதும் படித்து இன்புற்றேன்.

நகரக் கோவில்கள் ஒன்பதில் இன்று தலையாய நிலையில் நாட்டுமக்களை ஈர்த்து நல்வழி காட்டுவது பிள்ளையார்பட்டி ஆகும். அங்கு எழுந்தருளி உள்ள கற்பக விநாயகரைப் பற்றிக் கோவிலூர் ஆதினம் அதி அற்புதமாக அமைந்துள்ளது. மேலும் கோவிலூர் ஆதி ஸ்ரீ முத்துராமலிங்கத் ஆண்டவர் அவர்கள் எழுதி உள்ள கவிதை ஈடு இணையற்றது. அந்த வகையில் இந்த நூலும் ஸ்ரீ முத்துராமலிங்க ஆண்டவரைப் பற்றிய குறிப்பும் (பாடல் 73) இந்நூலில் இடம் பெற்றிருப்பது பாராட்டத் தக்கது.

இந்நூலாசிரியர் "வரகவி" தேவராஜன் செட்டியார் ஏராளமான நூல்களை எழுதி இருப்பது போற்றுதற்குரியது. அவரது நூல்களை வாய்ப்பு ஏற்படும் பொழுதெல்லாம் அவரது மைந்தர் திரு. சொக்கலிங்கம் பக்தி சிரத்தையோடு வெளியிடுவது பாராட்டுக்குரியது.

இந்நூலின் முதல் காப்புச் செய்யுளே மிக அருமையாக அமைந்துள்ளது. தொடர்ந்து பல சந்தங்களில் நூற்பாக்கள் பல அமைந்து பாடலுக்கு மெரு கூட்டுகின்றன. புராண, இதிகாச, வரலாற்று நிகழ்ச்சிகள் அங்கங்கே விரவி வருவது இந்நூலுக்கு அணிசேர்க்கிறது.

''கத்தும் திரையெறி அமுதாழி உதித்தவெண்
கற்றை நிலவுமிழ் மதிவேணி தரித்தவர்
கக்கக் ககவெனும் நகையால்முப் புரத்தினைக்
கப்பும் புகையொடு கனல்மூள எரித்தவர்''..

என்ற இரண்டாம் பாடலும் 8, 16, 19, 28, 49, 52, 87 முதலிய பாடல்களும் சந்த அழகுக்கு நல்ல எடுத்துக் காட்டாகும்.

14, 23, 61 - ஆம் பாடல்கள் கற்பனைக்கும்
32, 95 -ஆம் பாடல்கள் நூலாசிரியரின் சுய வரலாற்றுக்கும்
40 - ஆம் பாடல் திருமண சந்தைக்கும்
67 - ஆம் பாடல் சரித்திர நிகழ்ச்சிக்கும்
78 - ஆம் பாடல் பிள்ளையார் பிடித்தலுக்கும்
79 - ஆம் பாடல் புராண நிகழ்ச்சிக்கும்
82 - ஆம் பாடல் சிராவயல் மஞ்சு விரட்டுக்கும்
84 - ஆம் பாடல் பெரிய புராண நிகழ்ச்சிக்கும்
86 - ஆம் பாடல் திருப்பூட்டு நிகழச்சிக்கும்
96 - ஆம் பாடல் மணிவாசகர் பாங்கிற்கும்
98 - ஆம் பாடல் கந்தபுராண நிகழ்ச்சிக்கும்
நல்ல உதாரணங்கள் ஆகும்.

நூல் முழுதும் படியுங்கள். கற்பக விநாயகரின் பரிபூரண அருளைப் பெறுங்கள்.

அன்புள்ள,
அரு. சோமசுந்தரன்.

தெய்வத்திரு "வரகவி" அள. சித. சொ. தேவராசன் செட்டியார் பாடியருளிய பிள்ளையார்பட்டி ஸ்ரீ கற்பக விநாயகர் பிள்ளைத்தமிழ் நூலுக்குக் கண்டனூர் மகாகவி பேராசிரியர் அர. சிங்காரவடிவேலன் (எ) அரசிபாடிய

## சாற்று கவி

சிவபூசைச் செல்வரவர் **தேவ ராசர்**
செந்தமிழர்; கவியரசர்; பிறவிமேதை
தவப்பயனாய்த் தமிழ்நாட்டின் நகரத் தாரின்
தரமுயரச் சிவபெருமான் தந்த செல்வம்;
சிவப்பணியும் தமிழ்ப்பணியும் நாட்டுக் காகச்
செய்பணியும் சரிநிகராய்ச் செய்த சான்றோர்
தவச்சிறந்த கற்பகப்பா மலைமேல் தேனே
சாற்றுகவி யான்பாடத் தவம்செய் தேனே.

தெய்வமான தம்தந்தை நெய்த நூல்கள்
செப்புலக மொழிகளைப்போல் பதினெண் மாலை
பெய்ஞானக் கற்பகமாம் பிள்ளை மேலே
பெய்தபிள்ளைத் தமிழ்மாலை தலைமை மாலை
நெய்வேத்யம் செய்வதுபோல் தனக்குப் பிள்ளை
நிகழுமண நன்னாளில் அவரின் பிள்ளை
தெய்வமலர்த் திருவடியில் படைக்கின் றாரே
தேங்காயை அரசிகவி உடைக்கின் றேனே.

இனப்பற்று மொழிப்பற்று நாட்டுப்பற்றும்
இறைப்பற்றுள் அடங்குமென நாட்டும் இந்நூல்
பணப்பற்றும் மதப்பற்றும் கொழுத்து நாட்டைப்
பாழாக்கும் அறிவிலிகள் பாவம் பற்றும்
மனப்பற்றை மாற்றுகிற மருந்து நூலாம்
மலைப்பற்றும் மதலைக்கு மாதின் பாலாம்
தனைப்பெற்ற தந்தைக்குச் **சொக்க லிங்கம்**
தாள்பற்றித் தலையணியும் சரணம் தானே.

சரணமிடத் தக்கநூலின் பெயர்சொன் னாலும்
சகலமுமே நம்வாழ்வில் சித்தி யாகும்
அரணமென எப்போதும் அமையும் காக்கும்
அன்புமனம் அமுதமொழி அறங்கள் பூக்கும்
மரணமிலாப் பெருவாழ்வைத் தேவ ராசர்
மணிநூலால் எய்திநமை எய்தச் செய்தார்
கரணங்கள் கணபதிக்கு; வணக்கம் நன்றி
கவிஞருக்கும் தலைமுறைக்கும்; வாழ்க நன்றே!

அன்புடன்
**அர. சிங்காரவடிவேலன்.**



# குமரகுருபரரின் மறுபிறப்பு

பேராசிரியர் மா. கண்ணப்பன்

எனது உறவினர் மரியாதைக்குரிய அமரர் சிவபூசைச் செல்வர் சொ. தேவராஜன் செட்டியார் அவர்கள் இறையருளால் படைத்திருக்கும் பிள்ளையார்பட்டி கற்பக விநாயகர் பிள்ளைத்தமிழை படிக்கும் பேறு இறையருளால் எனக்கும் கிட்டியது. கற்றுக்கொடுத்து வருவதில்லை கவிதை. அது கருவிலேயே உருவாவது என்பார்கள். அந்த வகையில் இவர்கள் கருவிலேயே கவிதை எழுதும் வரம் வாய்க்கப் பெற்றுள்ளார்கள் என்பதை இவ்வரிய பிள்ளை தமிழைப் படிக்கும் எவரும் ஏற்றுக் கொள்வர்.

கவிதை எழுதுவதே அரிய செயலாகும். அதிலும் பிள்ளைத் தமிழ் பாடுவது கவிஆற்றல் மிக்கவருக்கே கைகூடும் ஒன்றாகும். பலவித சந்தங்களையும் பாங்குற பயன்படுத்தியுள்ளார்கள். பொங்கு கங்கையைப் போல தங்கு தடையின்றி தெளிவான கவிதையோட்டம் தாவிச்செல்கிறது. காப்பு பருவத்தில் தொடங்கிய கவிதை அழகு நிறைவுப்பாடலாகிய ''சீருலவு'' எனத்தொடங்கும் பாடல் வரை தொடர்ந்து கட்டியம் கூறுகிறது.

சுருங்கக்கூறின், இவர்களின் பெயரை தெரிவிக்காமல் இந்தப் பிள்ளைத் தமிழின் பாடல்களை மட்டும் படிக்குமொருவர், படித்தபின் கூறும் கருத்து இதுவாகத்தான் இருக்கமுடியும். ''மீனாட்சி பிள்ளைத் தமிழை, பாடிய குமரகுருபரர், இந்த பிள்ளையார்பட்டி

கற்பகவிநாயகர் பிள்ளைத் தமிழை எப்பொழுது பாடினார்''. படித்து பார்த்தவர் இப்படி கூறுவது ''உண்மை, வெறும் புகழ்ச்சியில்லை''.

நாடு நகரமும் நற்றிருக் கோயிலுந்
தேடித் திரிந்து சிவபெரு மான்என்று
பாடுமின் பாடிப் பணிமின் பணிந்தபின்
கூடிய நெஞ்சத்துக் கோயிலாக் கொள்வனே.

என்ற திருமந்திரத்தை சிவபூசை செல்வர் அவர்கள் தம் வாழ்வின் மந்திரமாகக் கொண்டதால் தான், இப்படிப்பட்ட இறைமணம் கமழும் பிள்ளைத் தமிழை பெற்று எடுக்க முடிந்தது.

தந்தையின் விலாசத்தை மட்டும் தன் விலாசமாகப் போட்டுக் கொள்ளாமல் சிவபூசைச் செல்வரின் அருமை மைந்தர் திரு. சொக்கலிங்கம், தம் தந்தையின் அரிய இலக்கியங்களையும் அச்சிட்டு அனைவரும் அறியும் வண்ணம் பரப்புவது பாராட்டுக்குரியது. ஒரு தனயன், தன் தந்தைக்கு ஆற்றும் கைமாறு இதைவிட வேறு என்னவாக இருக்க இயலும். தொடர்க திரு. சொக்கலிங்கம் அவர்களின் தெய்வத் தமிழ்த்தொண்டு.

சென்னை அன்புடன்,
22-02-2002 **மா. கண்ணப்பன்**

சிவமயம்

# மன்றல் வாழ்த்து

| மணநம்பி | மணநங்கை |
| --- | --- |
| **சொ. தேவராஜன்** | **இலக்குமி** |

சீர் வளரும் தமிழ்நாட்டில் செட்டி நாட்டில்
சீர்காரைக் குடியதனில் தேவ ராஜப்
பேர் வளரும் பாட்டய்யா! அவரின் அய்யா
சிதம்பர ஞான தேசிகர்! காசி வாசி!
சிதம்பரத்தில் பொன்னம்பல மடத்தில் நல்ல
நந்தியதன் ரூபத்தில் விளங்கும் அய்யா!
பதம் தொழுது சித்தப்பா **தேவ ராஜன்**
பாமணக்கும் திருமணத்தில் வாழ்த்து கின்றேன்!
அய்யாக்கள் கோவிலூர் ஆதீனத்தின்
அருளாசி பெற்றவர்கள்! அவர்கள் வாழ்த்த
செய்கின்ற தொழில் அதனைத் தெய்வம் என்றே
சேவித்த தேவராஜப் பாட்டய்யாவும்
படைவீட்டுப் பதிகங்கள் பாடி வைத்தார்!
பாட்டாலே சீராண்டார்! அவர்கள் பெற்ற
நடையாலே தான்உயர்ந்த சொக்க லிங்கம்
நனிசிறந்த பண்பாளர்! அடக்கம் மிக்கார்!

பாட்டய்யா பாடல்தனைக் கோயில் தோறும்

பதிப்பித்து பண்பாளர்! அப்பத் தாவோ

நீட்டாகக் குடும்பத்தைக் கட்டிக் காத்து

நிலைத்தபுகழ் மீனாட்சி ஆச்சி! இந்த

கூட்டாட்சிக் குடும்பத்தின் இளைய பிள்ளை

தேவராஜன் தேவகோட்டை **லெட்சுமி** தன்னை

வீட்டரசி ஆக்குகின்ற இனிய நாளில்

அண்ணன்மகன் தேவராஜன் வாழ்த்துகின்றேன்!.

யாரோடும் பகை எண்ணாப் பாட்டய்யாவின்

யாழிசைக்கும் கவிபோல வாழ்க! வாழ்க!!

தேரோடும் வீதியிலே செவ்வாய் அன்று

தேர்செலுத்தும் கொப்பாத்தாள் அருளால் வாழ்க!

நீரோடும் முடிகொண்டான் சிதம்பரத்தில்

நிதம் ஆடும் நடராஜன் அருளால் வாழ்க!

சீரோடும் சிறப்போடும் இன்பம் பெற்று

செழிப்புடனே பல்லாண்டு வாழ்க! வாழ்க!!

காரைக்குடி அன்புடன் வாழ்த்தி வணங்கும்

**24-04-2002** மு. தேவராஜன்

---

பாவாக்கம் : பேராசிரியர் மா. கண்ணப்பன்

---



உ

சிவமயம்

# பிள்ளையார்பட்டி அருள்மிகு
# கற்பக விநாயகர் பிள்ளைத்தமிழ்

ஆக்கியோன்: 'வரகவி' அள. சித. சொ. தேவராஜன் செட்டியார்



## காப்பு

### விநாயகர்

பிள்ளை மதியும் கங்கையெனும்
பேரார் நதியும் அறுகிதழி
பிச்சி மலரும் புனை வேணிப்
பிரானார் மகிழ் மலையரையன்
பிள்ளை உமையாம் பிகைமகிழப்
பெற்றோர் தந்தை தாயைவலம்
பேரன் போடு வந்துசுவை
பெருகும் தேமாங் கனிபெற்ற
பிள்ளாய்! ஞானப் பெட்டகமே
பீடார் மருதங் குடிமேவும்
பெருமால் யானைக் கன்றே! நின்
பேரில் பிள்ளைத் தமிழொன்று
பிள்ளை யாம்நான் பாடுதற்குப்
பேணும் துணையாய் உடனிருந்து
பிறங்கும் செஞ்சொல் பொருளொடுசீர்
பெருகி வருத்தற் கருள்வாயே.

# கற்பக விநாயகர் பிள்ளைத்தமிழ்

நூல்

## காப்புப் பருவம்

### திருமால்

நீரோடு மலர்தூவி நித்தம் துதிக்கும்ஓர்
நீள்புழைக் கரத்து வேழம்
நெடுங்கயம் புகலும்வெங் கரவொன் றெயிற்றினால்
நெருக்கிப் பிடிக்க அலறி
நாராயணா! ஆதி மூலமே! என்னவும்
நளினமலர் மங்கை செங்கை
நழுவவிட் டோடோடி வந்திபத் துயிர்காத்த
நாதன்மது சூதன் காக்க
காராடும் தெண்டிரைக் கடலோடித் திரவியம்
கருத்தோடு தேடி வந்து
காசினியில் எங்கணும் மாசின்றி நல்லறம்
கண்ணெனக் கருதி ஓம்பும்
பேராரும் மாவணிகர் சீரோடு வாழயிப்
பேருலகில் அருள்சு ரக்கும்
பிள்ளையார் பட்டித் தலத்தில்வளர் கற்பகப்
பிள்ளையை நாளும் இனிதே.



## 2 மருதீசர்

கத்தும் திரைபொறி அமுதாழி உதித்தவெண்
கற்றை நிலவுழிழ் மதிவேணி தரித்தவர்
கக்கக் ககவெனும் நகையால்முப் புரத்தினைக்
கப்பும் புகையொடு கனல்மூள எரித்தவர்
பத்துத் தலையனோர் கயிலாயப் பொருப்பினைப்
பற்றிப் பெயர்த்திட அடர்தோளை நெரித்தவர்
பச்சைக் கொடிதவழ் மருதீசர் திருப்பதம்
பற்றிப் பரவச முறநாளும் பழிச்சுதும்
தித்தித் திடுசுவை யமுதுறு மொழிச்சியைச்
செப்புக் கவித்தன வனமாரும் தனத்தியைச்
சிட்டுக் குறத்தியை இளையோன்கை பிடித்தெழில்
செப்பற் கரியசீர்த் தணிகா சலத்தினில்
வைத்துத் திருமணம் கொளவேநன் றளித்தருள்
மத்தப் புனல்சொரி மருதூர்க்கற் பகத்தினை
மட்ட விழுங்குழல் சிவகாமி அனைக்கொரு
மட்டற்ற அன்புள புதல்வோனைப் புரக்கவே.

## 3 வாடாமலர் மங்கை

பெருவரை அரையனின் மகளெனத் தோன்றியும்
பிரமா புரக்குழ விக்கமு தூட்டியும்
அருமறை முடியின்மீ தடியிணை சூட்டியும்
அடியார் அகத்தினில் ஒளிவிளக் கேற்றியும்
மருதநன் குடியிலும் மணமலர் ஏட்டிலும்
வதிவா டாமலர் மங்கையைப் போற்றுதும்
உரைசெயும் எனதுபுன் மொழியையும் ஏற்றருள்
உயர்சீர்க் கற்பகப் பிள்ளையைக் காக்கவே.

## 4 முருகன்

கரையாத கல்மனம் கரைந்துநெக் குருகிடக்
கருணைமன மணிவா சகர்
கழறுதிரு வாசகம் எழுதிமன மகிழ்வுறும்
கனகசபை அப்ப னைப்போல்
வரைமேரு மீதினில் மாபா ரதக்கதை
மாமுனிவர் சொல்ல அஃதை
மளமளவென் றேவரைந் துளமகிழுங் கற்பக
வாரணத் தைப்பு ரக்க
திரைமோது செந்திலம் பதியினில் பேரன்பு
செய்தபக ழிக்கூத் தனின்
செந்தமிழ் கேட்டதும் அன்னவன் பிணிதீர்த்த
செம்மலே செல்வனே! நக்கீரர்
உரையாற்றுப் படையினைச் செவியார மடுத்தந்த
ஒண்புலவன் உயிர் காத்திட
ஒருதோகை மயிலேறி வடிவேலை விடுதீர
உயர் குன்றக் குடிவே லனே.

## 5 பிரமன்

உந்திக் கமலத் தினில் தோன்றி
ஒளிர்செங் கமலை முகம் பார்த்தே
உலகில் கமலம் படைத்தடியார்
உள்ளக் கமலம் போல்வெண்மை
தந்த கமலத் தவிசிருக்கும்
தகை சால் துணையோ டண்டசரா
சரமெல் லாமுண் டாக்கிமகிழ்
தலைநான் குடையான் தாள்பணிவாம்.
சிந்திக் கமலம் மூன்றினையும்
செய்த வினைகள் இரண்டினையும்
தேய நலிவித் தெளியேற்குச்
சீரார் கமலப் போதிணையை
வந்திக் கமனம் ஒன்றருளி
மருதங்குடியில் நின்றருளும்
மாதங் கத்தைக் கற்பகமா
மணியை இனிது புரந்திடவே.

## 6 திருமகள்

மாடுமனை மக்களும் காடுகரை கழனியும்
மணிகனக அணி ஆடையும்
மதுரநல் வசனமும் மதிநுட்ப திட்பமும்
மனோதை ரியத்தி னோடு
பீடுறச் செயலாற்றும் திறமையும் கீர்த்தியும்
பெருமைதரு பதவி பலவும்
பிறங்குவிழி நோக்கினால் சிறந்தருள் சுரக்குமோர்
பெருந் திருமங்கை காக்க
காடுவெட் டிக்கடின மாநிலம் சீர்செய்து
கனகமணிக் கதவம் இட்டுக்
கமலமலர் மங்கைநீங் காவணம் பெருவீடு
கட்டுதன வணிகர் எல்லாம்
தாடொழு தாண்டுதொறும் மார்கழித் திங்களில்
சட்டியுடன் சதய விண்மீன்
சார்நாளில் நோன்புற வாழ்வாங்கு வாழ்வகை
தரும் கற்பகத்தை யினிதே.

## 7 கலைமகள்

எட்டெட்டுக் கலைகளும் முற்றுணர்ந் திருப்பினும்
இறுமாப் படைந்தி டாமல்
இன்னமும் கற்பதற் குளதென் றுணர்த்தவே
ஏடுசெங் கரத்தி லேந்தி
மட்டற்ற அன்பினால் நித்தமும் மறைபுகல்
மலரயன் செய்ய நாவும்
மனமும்உறை மனையெனக் கொண்டகலை மங்கையின்
மலரடிகள் வழுத்து கிற்பாம்
பட்டுப்பட டெனத்தலை குட்டிக்கொண் டிருசெவிகை
பற்றிட உக்கி யிட்டுப்
பரவும்அடி யார்கிடை யூறேதும் வாராமல்
பண்ணுகா ரியங்கள் சித்தி
இட்டமுடன் பெற்றிட வைத்தருள் பாலிக்கும்
இபமுகக் கற்ப கத்தை
என்னம்மை சிவகாமி தன்னுளம் மகிழவரும்
இன்னமுதைக் காக்க என்றே.

## 8 கொற்றவை

அருமைத் தாயியர் யோகியர் ஞானியர்
அமரர் முதலானோர்
அஞ்சி நடுங்கிட வெஞ்செய லேபுரி
அவுணப் படை சாய
எருமைத் தலையுடை அசுரனும் வீழ
இமையோர் குலம் வாழ
இருஞ் சமர் புரிபவள் அரிமிசை ஊர்பவள்
இறைவி கொற் றவைகாக்க.
தருமிக் கிருநிதி தானுறு மாறுசெந்
தமிழில் கவிபாடித்
தூஅக் கவிதையில் குறைபுகல் கீரனைத்
தருக்கத் தினில் சாடி
அருளைப் புரிசிவ சங்கர சம்புவின்
அருமைப் புதல்வோனை
அணிசீர் மருதங் குடியினில் மருவுமெய்
யறிவுக் களிற்றினையே.

## 9 வயிரவர்

வடிபட்ட முக்குடுமி வேற்படை காத்தேந்தி
வாரணத் தினையுரித்து
வாளெயிற் றுரகபண கங்கணம் அணிந்திம
வான்மகள் அஞ்சி டக்கண்
டிடியுற்ற குரலினில் நகைகொட்டி யாடிநின்
றிரும்ஞாளி மீதிவர் ந்திட்
டின்னருள் தருவடுகச் செந்நெறிச் செல்வனார்
இளமந்தி தெங்கி லேறி
உடைபட்ட காயினை உயரத்தில் வீசவான்
ஒண்டொடி மடந்தை மார்கள்
ஓடிவந் தெடுத்துண்டு மகிழ்ந்துநட மாடவும்
உடனாடும் தோகை மயில்கள்
கடியுற்ற சோலைபசி நிறைவுற் றுலாவுசீர்க்
கவினுற்ற மருதூரினில்
கடைமிடற் றண்ணல்முடி பிறைபற்றி விளையாடும்
களிற்றினைக் காக்க இனிதே.

## 10 ஆதின மிளகி அய்யனார்

ஆலாலம் உண்டவன் பாலான மாயனின்
அருட்கரம் பற்றி நிற்ப
அக்கணம் தன்னிலே பொற்கரத் துதித்தசீர்
ஆதின மிளகி என்னக்
கோலா கலத்துடன் மருதநன் குடியினில்
கோதைமார் இருவ ரோடு
கூடியோர் ஆலயம் கொண்டுவீற் றிருந்தருள்
கூர்மகன் நனி புரக்க
மூலா தாரத்தினில் மூண்டெழுங் கனலினை
மூச்சினால் மேலே மூப்பி
முரிபுருவ மத்தியில் வைத்தொளிர் சோதியில்
மூழ்கமனம் ஒன்று வித்துப்
பாலாமிர் தத்தின்நிலை காட்டியது பருகற்கு
பாயமும் காட்டி எற்குப்
பரஞான போதமருள் குருநாத னானகற்
பகமெனும் குழவி தனையே.

## 2. செங்கீரைப் பருவம் -11

பத்தியுமை யாம்பிகை பிடியொன்றின் உருவினைத்
தாங்கிட கயிலை யென்னும்
துவளமலைக் குரிமைகொள் பவளமலை வண்ணனார்
தாமும் ஒரு களிற தாகி
நத்திமகிழ் கூரவும் நல்லறம் தழைக்கவும்
நான்மறையின் மூலம் என்ன
நவில்கின்ற பிரணவசொ ரூப மும்மத
நால்வாயும் ஐந்து கரமும்
அத்திமுக முங்கொண்டு தன்னைவழி படுவோர்கள்
அல்லல்கள் அகன்றி டப்பேர்
ஆனந்தம் கொண்டுய்ய தான்வந் துதித்தவா.
அரிய குண கணநா தனே.
சித்தியொடு புத்தியும் நத்திமகிழ் செம்மலே
செங்கீரை ஆடி யருளே.
திருவீங்கைக் குடியமர்ந் தருள்கூரும் தெய்வமே
செங்கீரை ஆடி யருளே.

## 12

டமடமவென் றரனார்பொன் முடியினின் றிழிந்தோடி
வருகங்கை அன்னை யுன்னை
வண்டிறைக் கரங்கொண்டு நீர்முழுக் காட்டிட
மாநதியின் நீரை நீயும்
சடுகுடுவென் றோடிவரும் பள்ளிச் சிறாருடன்
சற்றுவிளை யாட எண்ணி
தாழ்தடக் கையினால் அள்ளித் தெளிக்கவும்
தலைவணங் குஞ்சி றார்போல்
குடுகுடுக் கிழவரும் கோலூன்றி வந்துனைக்
கும்பிட்டு வணங்கி நிற்ப
கோதிலா நோன்புகொள் கோதையரும் புனிதநீர்
கொள்ளுதற் காக நின்முன்
திடுதிடென வரல்கண்டு சிரித்துமகிழ் செல்வமே
செங்கீரை ஆடி யருளே.
திருவீங்கைக் குடியமர்ந் தருள்கூடும் தெய்வமே.
செங்கீரை ஆடி யருளே.

## 13

மாமேவு மலையதே ஏடாக வெண்மைசேர்
மருப்பெழுத் தாணி யாக
வைத்துமா பாரதக் கதையெழுதிப் பெருமைசால்
மணிக்கரம் மண்ணில் ஊன்றி
நாமேவும் பழமறையின் முடியிலும் அடியவர்
நல்மனம் தனிலும் மேவும்
நளினமலர்த் தாளிணையில் ஒன்றினை மடக்கியும்
நன்குமற் றொன்றை நீட்டித்
தூமேவு நின்புழைக் கரமானும் பிள்ளையார்
சுழியிட் டிறைஞ்சு மன்பர்
தொட்டகா ரியமெலாம் சட்டென முடித்துநற்
சுழியுடன் வாழ அருளும்
தேமேவும் கற்பகப் பேர்மேவும் செல்வமே!
செங்கீரை ஆடி யருளே.
திருவீங்கைக் குடியமர்ந் தருள்கூடும் தெய்வமே
செங்கீரை ஆடி யருளே.

## 14

சீர்கொண்ட தந்தையும் சிற்றம் பலத்தினில்
தினமும் நடமாடு கின்றான்
சிவனாருக் கெதிர்நடனம் திருவாலாங் காட்டினில்
தேவியும் ஆடு கின்றாள்
ஏர்கொண்ட வள்ளியுடன் தேவானை அம்மையும்
இருபக்கம் ஆடி நிற்ப
இளையவன் முருகனும் புள்ளிமயில் மீதேறி
எழில் நடனம் ஆடும் என்ன
பேர்கொண்ட தொந்தியை நீயும் சுமந்தாடின்
பேரண்ட கோளம் அதிரப்
பிளிறுமால் எண்டிசைக் களிறெலாம் ஆதலால்
பெருமநீ யாடல் நீக்கிச்
சீர்கொண்ட தலைதூக்கிச் சிறுகுழவி போலவே
செங்கீரை ஆடி யருளே
திருவீங்கைக் குடியமர்ந் தருள்கூடும் தெய்வமே
செங்கீரை ஆடி யருளே.

## 15

ஓமெனும் பிரணவத் தினையுச் சரிக்காமல்
உனைநினைந் தேத்தி டாமல்
உலகங்கள் யாவையும் உண்டாக்க முற்பட்ட
ஒண்கமல மலர்வே தனார்
தாம்மனத் தெண்ணிச் சமைத்தவா றேயண்ட
சராசரம் அமைந்தி டாமல்
தவறாய் முடிந்ததன் காரணம் யாதெனச்
சஞ்சலம் அடைந்து நிற்ப
ஏமுறும் உனதடிகள் பணியாத பிழையுணர்ந்
தேத்திப் பராவ அவருக்
கிடரேதும் வாராமல் தொடர்கா ரியமுடித்
தின்னருள் புரியும் செம்மல்
தேமருவு கற்பகப் பேர்மருவு செல்வமே
செங்கீரை ஆடி யருளே
திருவீங்கைக் குடியமர்ந் தருள்கூடும் தெய்வமே
செங்கீரை ஆடி யருளே:

16

முத்துப் பரல்நிறை சிலம்பு சதங்கை
முரன்று முரன்றாட
முளரிப் பதமலர் தழுவும் கிண்கிணி
மொழியும் இசைகூடக்
கொத்துச் சரப்பணி பதக்கமும் ஆடக்
குண்டலம் அசைந்தாடக்
குளிர்மதி வதனத் தெழுநில வென்னக்
குறுநகை நின்றாடப்
பத்திப் பரவச முற்றடி யார்கள்
பாதம் பணிந்தாட
பணிந்தெழு வார்தம் பண்டைய வினைகள்
பறந்து பறந்தோட
அத்தி முகத்தவன் அற்புதக் கற்பகம்
ஆடுக செங்கீரை
அணிசீர் மருதங் குடிவளர் பெருமகன்
ஆடுக செங்கீரை

17

முப்பழம் சர்க்கரை அப்பமொ டவல்பொரி
மொக்கிய திருவாயின்
முன்னின் றுதவற் கிசைவுறு நீன்புழை
மூரிக் கரமாடச்
செப்பிய செந்தமிழ் தோய்தரு செவிகள்
திறந்து திறந்தாடச்
செவிநுகர் கனியோ டெனதுபுன் மொழியும்
சேர்ந்து நுழைந்தோட
இப்புவி மக்கள் எண்ணிய கருமம்
இனிது முடிந்திடவே
இணையடி தொழவும் தடைகள் அகற்றி
இன்னருள் தருமுதலே
அப்புடை முடியற் கருமைத் திருமகன்
ஆடுக செங்கீரை
அணிசீர் மருதங். குடிவளர் பெருமகன்
ஆடுக செங்கீரை

18

வெள்ளிப் பனிவரை தன்னிற் கடுந்தவம்
மேற்கொள் இராவணனார்
மேன்மை யுறுஞ்சீர் ஆன்மலிங் கத்தை
வேண்டிப் பெற்றுவரத்
துள்ளித் திரிசிறு வன்வடி வாகித்
தும்பிக் கைமறையத்
தோளிரு பதுகொள் வாரைக் கள்நீர்
தோதாய்க் கழித்த ற்காக்
கொள்ளிலிங் கத்தை மும்முறைகூவியும்
கோனவன் வாராத
குறையால் தரையில் கோகரு ணத்தில்
குடிகொள வேவைத்த
அள்ளும் புகழ்சேர் அற்புதக் கற்பகம்
ஆடுக செங்கீரை
அணிசீர் மருதங் குடிவளர் பெருமகன்
ஆடுக செங்கீரை

19

கொங்கைகள் குன்றின் கொடும்பகை
வென்றோம் என்றாடக்
கொண்டல் முகத்தில் குழல்கரி பூசி
நின்றாடச்
செங்கை மணத்தை நுகர்ந்திடவண்டு
வந்தாடத்
திரிதரு வண்டுடன் புள்ளினம் ஓட்டத்
திண்டாடும்
நங்கையர் நாயகம் வள்ளிம ணாட்டி
வாயூறும்
நறவம் விரும்பிய முருகனின்
முன்னர் வந்தோனே
திங்கள் முடித்தவன் திருமகன்
செங்கோ செங்கீரை
செப்பரு மறைதொழு கற்பகம்
செங்கோ செங்கீரை.

20

சங்கொடு சக்கரம் செங்கை தரித்த
அம்மானை
தாமுறு கோவிலும் மேவிடு தும்பிக்
கைம்மானே
கங்குல் நிறைந்திகழ் மணிமிடற் றீசன்
பொன்மேனி
கலந்து களித்தருள் அங்கையற் கண்ணி
யின் பாலா
பொங்கர வஞ்சிறு காலிடை வைத்த
பைந்தோகைப்
பொன்மயி லோறுக் கின்னருள் தந்து
வந்தோனே
செங்கண் விடையோன் திருமகன்
செங்கோ செங்கீரை
செப்பரு மறைதொழும் கற்பகம்
செங்கோ செங்கீரை.

## 3 தாலப் பருவம் 21

சின்னஞ் சிறுகால் அணிதண்டை
சிலம்பு சிலம்பக் கிண்கிணியும்
சேர்ந்தே ஒலிப்பச் செங்கீரை
சிறக்க ஆடிக் களைத் தயர்ந்த
உன்னை மலையான் மடந்தை மனம்
உவந்து வாரி எடுத்துமுலை
யூட்ட ஒருங்கே பால்முழுதும்
உறிஞ்சிக் குடிப்பத் தாழிவயி
றின்னம் பெருக்கக் கண்டஞ்சி
இமயத் தரசி உன்பாட்டி
ஏற்ற மருந்து கொடுக்கவும்நீ
ஏப்பம் பெரிதாய் விட்டுப்பின்
கன்னல் தனையும் ஒடித்துண்டு
களிப்பாய் தாலோ தாலே லோ.
கருணா கரனே கற்பகமாக்
களிறே தாலோ தாலேலோ.

## 22

அழகர் மாமன் திருத்தளியில்
அணியாப் பட்டை நாமமணிந்
தமரும் உன்னைத் தும்பிக்கை
யாழ்வார் என்னப் பலர்போற்ற
எழிலார் வசை மாமியுனைக்
கினிய சித்தி ரான்னவகை
ஏற்ற வண்ணம் படைக்கவதை
எடுத்துப் புசித்து மகிழ்ந்திருக்கும்
பொழுதுன் தந்தை கூட்டிவரப்
பூத கணத்தை அனுப்ப முன்பு
போட்ட நாமம் விரைந்தழித்துப்
பூதி நிறையப் பூசியரன்
கழிபே ருவகை கொள்ளவரும்
கண்ணே தாலோ தாலேலோ.
கருணா கரனே கற்பகமாக்
கன்றே தாலோ தாலேலோ.

## 23

அள்ளற் பழனத் தரக்கு நிறத்
தாம்பல் மலரச் செங்குருதி
யாகத் தோன்றும் நீரினைக்கண்
டஞ்சி ஒண்சங் கினம் ஈனும்
வெள்ளை நிறத்துச் சுடர்முத்து
மேவும் ஆம்பல் தரும் ஒளியால்
மிளிர்மா ணிக்கம் போல்திகழ
மெல்லி னல்லார் செங்கரத்தில்
அள்ளும் அஃதைப் பாராமே
அவர்தம் செவ்வாய் தருமுத்திற்
கவாவு மகிழ்நர் மகிழ்நகராம்
அணிசீர் மருதங் கூருடையாய்
கள்ளம் இல்லார் அகத்தில் விளை
கரும்பே தாலோ தாலேலோ.
கருணா கரனே கற்பகமாக்
களிறே தாலோ தாலேலோ.

24

சொல்லின் நயமும் பொருள் நயமும்
தொடையின் நயமும் நடை நயமும்
துலங்கும் அணியின் நயம் பலவும்
தோன்ற வானத் தமிழ்தினையும்
வெல்லும் இனிய செந்தமிழில்
மேலாம் காவி யம்படைக்க
மெய்ம்மைப் புலவோர் உனைத் துணையா
வேண்டி நிற்ப விண்ணுலவும்
செல்லின் விஞ்சி யருள்மாரி
செழிக்கப் பொழிந்து துயேரதும்
சேரா வண்ணம் காத்து நிற்கும்
தேவே! தேவர் முடியின்மணிக்
கல்லும் பதியச் சிவந்த கழற்
காலோய் தாலோ தாலேலோ
கருணா கரனே கற்பகமாக்
கன்றே தாலோ தாலேலோ.

25

ஆறு திருவா யால்முருகன்
அனைத்துப் பாலும் குடித்ததனால்
ஆனைப் பசியால் வருந்துமெனக்
கமுதம் இல்லை யெனஏங்கிக்
கூறு மொழிகேட் டிமயத்தின்
குமரி உன்னை மடிவைத்துக்
கொழுமைச் செழுமைத் தனமொன்றைக்
கொடுப்பக் குடிக்கும் பொழுதேநீ
வீறும் மற்றோர் முலையினையும்
மெல்லத் துளைக்கை யால்நெருடி
விரும்பி யுறிஞ்சி விளையாடும்
வேழ முகத்துப் பெருமகன்நீ
காரின் விஞ்சு கொடைஞர் தொழும்
கடவுள்! தாலோ தாலேலோ
கருணா கரனே கற்பகமாக்
களிறே தாலோ தாலேலோ.

## 26

ஒன்றோ நீயும் நானுமெனா
உணர்வார் உள்ளத் தொன்றாகி
ஓதும் அவைதாம் இரண்டெனவே
உரைப்பார் உணர்வில் இரண்டாகி
நன்றாம் பதியும் நீயாக
நானும் பசுவாய் உனையடைய
நாடும் பாசம் உளதாக
நவிலின் உண்மை மூன்றாகும்
என்றே சைவ சித்தாந்தம்
இயம்பும் நெறியில் நின்றுன்னை
ஏத்திப் பூசை செய்பவரோ
டெனையும் அருளால் கூட்டுசிவக்
கன்றே மருதங் குடிவளரும்
கண்ணே தாலோ தாலேலோ
கருணா கரனே கற்பகமாக்
களிறே தாலோ தாலேலோ.

## 27

உலகம் படைக்கும் மறையவனார்
உன்னும் கருத்தைப் படைப்பவன்நீ
உலகம் அளிக்கும் திருமாலுக்
குவகை அளிக்கும் மருமான்நீ
நிலவை யணிந்து மணிமன்றில்
நித்தம் ஆடும் எம்பெருமான்
நெஞ்சில் ஆடும் அம்பிகையின்
நெஞ்சம் மகிழும் திருமகன்நீ
தலைவா சரணம் சரணென்று
தலையைத் தாழ்த்தித் தாள்பணிவார்
தலையே நிமிர்ந்து வாழும்வகை
தருமா முதலே தமிழில் நவில்
கலையா விற்கும் காப்பு முதற்
கடவுள் தாலோ தாலேலோ
கருணா கரனே கற்பகமாக்
களிறே தாலோ தாலேலோ.

## 28 வேறு

கொங்கைகள் பொங்கக் குளிர்புனல் வாவி
குடைந்து குடைந்தாடக்
கோதையர் தங்கள் திங்கள் முகத்தில்
குளிர் நீர்த் துளிவீழ
செங்கதி ரோன்ஒளி அத்துளி மீதிற்
சிந்த வயிரம் போல்
சிலுசிலு வென்ன எழிலுறமின்னும்
தெரிவைய ரைக் கண்ட
கொங்கலர்ச் சோலை மயிலினம் எல்லாம்
கோதையர் சாயலினைக்
கொடுவென நின்முன் குறையிரந் தேத்திக்
கோல நடமாடத்
தங்கும் வளமரு தங்குடி வாழ்பவ!
தாலோ தாலேலோ
தருமம் வளர்ப்பவர்க் கினிதருள் கற்பகம்
தாலோ தாலேலோ.

## 29

இல்லற மல்லது நல்லறம் அன்றென்
றியம்பும் கிழவிமொழி
இருசெவி புகலும் உறுதுணையின்றி
இனியும் இரோமென்ன
நல்லவர் எண்ணித் துணியும் கருமம்
நன்றுறச் சித்தியொடு
நலமுறு புத்தியாம் சத்திகள் இருவரை
நற்றுணை யாக்கொண்டே
எல்ல வருக்கும் இன்னருள் நல்கும்
இறைவா! கணநாதா!
இச்சக வாழ்வின் இறுதியில் ஓர்நாள்
எமன் வருபோதஞ்
சல்லென் றடியவர் தம்மைப் புரப்பவன்
தாலோ தாலேலோ
தருமம் வளர்ப்பவர்க் கினிதருள் கற்பகம்
தாலோ தாலேலோ

30 வேறு

வேழமுகத்து விநாயகனே தாலோ தாலேலோ
வேதப் பொருளுக் கிறையோனே தாலோ தாலேலோ
ஊழை வெல்லற் கருள்வோனே தாலோ தாலேலோ
உன்னும் கருமம் முடிப்பவனே தாலோ தாலேலோ
ஏழை எனையும் காப்பவனே தாலோ தாலேலோ
இன்னல் எல்லாம் தீர்ப்பவனே தாலோ தாலேலோ
பேழை வயிற்றுப் பெருமானே தாலோ தாலேலோ
பீடார் மருதங் குடிவாழ்வே தாலோ தாலேலோ.

## 4. 31. சப்பாணிப் பருவம்

செஞ்சிலம் போலிடச் சீரடி பெயர்த்து வரும்
தெரிவைமார் பலரும் வந்து
தேனிசைப் பண்பாடித் தாலாட் டுரைப்பநீ
சிறிதுகண் ணயர்ந்த போது
மஞ்சுநீர் பொழியாமல் பயிர்வாட உயிர்வாட
மக்களெல் லாம்வ ருந்தி
மத்தநீர் பொழிகளிற் றண்ணலே! விண்ணின்று
மாரிநீர் பெய்ய வையென்
றஞ்சலித் தேத்துமொலி செவிமடுத் தக்கணம்
ஆறுகுளம் ஏரி கண்மாய்
அனைத்தும் நீர் நிரம்பிடக் கனைத்திரும் கார்முகில்
அடைமழை கொட்ட வைத்துச்
சஞ்சலம் தீர்த்தருள் தரும் ஐந்து கைக்குழவி
சப்பாணி கொட்டியருளே!
தற்பரன் தனக்கினிய கற்பகச் செங்களிறு
சப்பாணி கொட்டி யருளே!.

## 32

மண்ணனைய மதியாளர் தம்மையும் ஒளிவீசு
மாணிக்கம் ஆக்கும் ரெங்க
வாத்தியார் பள்ளியில் வாசிக்கும் பிள்ளைகள்
மதிதொறும் சதுர்த்தி நாளில்
பண்ணிமனப் பாடமாய் வேழமுக நூலினைப்
பாடியொப் பிக்கும் போது
பகரும் வரி ''சப்பாணி கொட்டாயே'' என்னவும்
படபடவென் றேகை கொட்ட
உண்ணிலா உவகையொடு உன்முனம் படைத்திட்ட
உடைத்ததேங் காய்து ருவலோ
டுரித்தவா ழைப்பழம் சர்க்கரை கலந்ததை
உண்டுமகிழ் கூடும் ஐயா!
தண்ணிலாப் பொழியுமதி பணியஅருள் செல்வமே
சப்பாணி கொட்டி யருளே!
தற்பரன் தனக்கினிய கற்பகச் செங்களிறு
சப்பாணி கொட்டி யருளே!.

## 33

பன்னிரு கரம்கொண்ட பாலமுரு கேசனும்
பலவீர பத்ர னோடு
பைரவன் முதலாய தெய்வச் சிறார்களும்
பலீன்கிச் சடுகு டுவெனப்
பண்ணு தமிழ் நாட்டுவிளை யாட்டயர்ந் திடநீயும்
பங்குகொண் டாடும் போது
பலபேரும் வந்துனைக் கட்டிப் பிடிக்கவும்
பகரும்சொல் நிறுத்தி டாமல்
துன்னிருப் புத்தளை தூளாக்கும் பருத்தகால்
தூக்காமல் நின்ற வாறே
தும்பிக்கை நீட்டிநடுக் கோட்டினைத் தொடவெற்றி
சூடிக் களிக்கும் ஐயா!
தன்னிக ரிலாப்பிள்ளை யார்பட்டிச் செல்வமே
சப்பாணி கொட்டி யருளே!
தற்பரன் தனக்கினிய கற்பகச் செங்களிறு
சப்பாணி கொட்டி யருளே!.

## 34

திரைகொண்ட புனிதநீர் நிறைகமண் டலத்தினைத்
தென்திசைக் கேகொ ணர்ந்த
சீர்கொண்ட அகத்தியப் பேர்கொண்ட குறுமுனி
தியானத்தில் இருந்த போது
கரைகின்ற காகத்தின் வடிவினை நீகொண்டு
கமண்டலந் தன்னில் அமரக்
காக்கையை விரட்டுதற் காமுனி கைநீட்டக்
கவிழ்கமண் டலத்து வெள்ளம்
நிரைகொண்ட காவிரி மாநதிய தாகவே
நீனிலத் தோட வைத்து
நிறைகின்ற வளமையும் கலைதந்த புலமையும்
நிலைதெய்வ பத்தி யாவும்
தருகின்ற வெற்பகத் தற்புதத் தெய்வமே!
சப்பாணி கொட்டி யருளே!
தற்பரன் தனக்கினிய கற்பகச் செங்களிறு
சப்பாணி கொட்டி யருளே!.

## 35

பனிமருவு கயிலையம் பதிமருவு முக்கட்
பரம்பொருள் தன்னை யுன்னி
பலகாலம் தவஞ்செய்தெப் படையாலும் அழியாத
படிவரம் பெற்று வந்தோன்
முனிவரொடு தேவரும் யாவரும் வந்துதன்
முன்னர்நின் றுக்கி யிட்டு
முட்டிக்கை யால்தலையில் குட்டிக்கொண் டேதினமும்
மொழிதரா மல்வாய் பொத்தி
மனம்நடு குறவைத்த கயமுகத் தசுரனை
வான்மருப் பொன்றொ டித்து
வதம்செய்தன் னவனையும் கருணையால்மூடிக
வாகனம தாக்கி யாண்டாய்
தனவணிகர் மனமகிழ இனிதருள் தெய்வமே
சப்பாணி கொட்டி யருளே!
தற்பரன் தனக்கினிய கற்பகச் செங்களிறு
சப்பாணி கொட்டி யருளே!.

## 36

வெள்ளியங் கிரியினில் மெய்ஞ்ஞான யோகத்தில்
வீற்றிருப் பானுன் தந்தை
வேங்கடா சலம்நாடி ஓடிவரு வார்குறை
விரைந்துதீர்ப் பானுன் மாமன்
விள்ளுபுகழ் பழனிமலை கழுகுமலை சிவன்மலை
விராலிமலை தணிகை முதலா
மேதினியில் உள்ளமலை அத்தனையும் சென்றேறி
விளையாடு வானுன் தம்பி
தெள்ளுதமிழ்க் கிழவியைத் திருக்கரத்தால் கயிலை
சேர்ப்பித்த உனக்கு வெற்பு
சேர்வதோர் பொருட்டல்ல திருவீங்கைக் குடியினில்
திகழுமலை குடைந்து மையல்
தள்ளிமெய் யொளிவீசித் தண்ணருள் தருதந்தி
சப்பாணி கொட்டி யருளே!
தற்பரன் தனக்கினிய கற்பகச் செங்களிறு
சப்பாணி கொட்டி யருளே!.

## 37

கவிபாடும் திறமையும் புலமையும் கொண்டசிலர்
கரம்எழுது கோலெ டுத்துக்
கவினாரும் பிறர்கவியின் கருத்தி னையறியாமல்
கண்டபடி யேதிருத்திப்
புவிமீதில் அக்கவிஞர் ஆர்வமும் குறைத்துளம்
புண்ணாக்கல் போல நீயும்
புசித்திடற் கமுதீனும் மார்பினைக் கோட்டினால்
பொருதி வடுச் செய்தல் முறையோ
சிவனாரின் செல்வமே என்றுமை வருந்தவும்
திருப்புழைக் கரங்கொ டம்மை
செம்மார்பில் எச்சில்படத் தடவிப்புண் ணாற்றியே
சித்தமகிழ் வித்த தேவே
தவமாரும் முனிவர்தொழ அருள்கூரும் தெய்வமே
சப்பாணி கொட்டி யருளே!
தற்பரன் தனக்கினிய கற்பகச் செங்களிறு
சப்பாணி கொட்டி யருளே!.

## 38 வேறு

மாலைப் பொழுதில் மங்கிய ஒளியில்
மதுவுண் டொரு வண்டு
மயங்கிக் கமல மலர்மிசை யமர
மலரிதழ் குவிந்திடவும்
சோலையில் எங்கணும் துணையினைத் தேடிச்
சுற்றித் திரி ஞிமிறு
சுரும்பினைக் காணா தயர்ந்து முகாரி
சுருதிப் பண்பாட்டைக்
காலைக் கதிரொளி பட்டுக் கமலம்
கதவந் திறந்துவிடக்
களிகொண் டளியும் பெடையுடன் கூடியுண்
கருணைத் திறம்பாடிக்
கோலத் திருவடி தொழவருள் கற்பகம்
கொட்டுக சப்பாணி
குழவி மதிக்கலை முடியில் தரித்தவ
கொட்டுக சப்பாணி.

## 39

மாசித் திங்கள் மங்குறு பிறையில்
மங்கள வாரத்தில்
வருசங் கடகர சதுர்த்தி நாளில்
மாலை நேரத்தில்
வீசும் வெண்ணில ஒளிமதி யினையும்
விநாயக நின்றனையும்
வேண்டித் தரிசித் தாறிரு மதியும்
விரதம் மேற் கொண்டு
நேச் தோடெளி யோர்க்குண வீந்து
நியமத் திருப்பார்க்கு
நிலவும் சங்கடம் நீங்கிப் பலவளம்
நிரம்ப நலமாய்க் கோள்
கோரப் பலனைத் தரஅருள் கற்பகம்
கொட்டுக சப்பாணி
குழவி மதிக்கலை முடியில் தரித்தவ
கொட்டுக சப்பாணி.

40

கட்டுக் கழுத்திய ராக விரும்பிக்
காத்துக் கிடக்கின்ற
கன்னிப் பெண்கள் கடிமணம் கொள்ளக்
கடிதில் முயன்றுதவும்
சிட்டர்கள் வாழ்வு செழித்திட வைக்கும்
செய்ய மலர்க் கரமும்
திருமணம் தன்னை ஒருகணப் போதில்
தடுத்து நிறுத்திவிடும்
துட்ட மனத்தவர் வாழ்வு தொலைந்திடத்
தூக்கிய மறுகரமும்
துன்பமும் இன்பமும் ஒன்றுடன் ஒன்றெதிர்
தோள் கொடு மோதுதல் போல்
கொட்டிப் பெருமுகில் கோடை முழக்கெனக்
கொட்டுக சப்பாணி
குழவி மதிக்கலை முடியில் தரித்தவ
கொட்டுக சப்பாணி.

4. முத்தப் பருவம் -41

பங்கயன் மாலுடன் இந்திரன்
ஆதியர், வந்து பணிந்திடவே
பரவும் புகழுறு மருதங் குடிவளர்
பைங்கரு ணைக்கடலே
செங்கம லக்கரப் போதிணை சேரச்
சீராய்ச் சப்பாணி
சிறப்பக் கொட்டி முழங்கொலி கேட்டுத்
தெரிவையர் யாம் வந்தோம்
திங்கள் முகத்தெழில் குறுநகை சிந்தச்
சிந்தும் நறைகமழச்
செங்கனி வாயிதழ் ஒன்று குவித்துச்
சிறியேம் கன்னத்தில்
முன்கை யுயர்த்தியே மும்மதக் கற்பகம்
முத்தம் அளித்தருளே
முக்கட் பரசிவ னுக்குத் தலைமகன்
முத்தம் அளித்தருளே.

42

செந்நெற் குலையில் கன்னற் கழியில்
செந்தா மரை மலரில்
சிந்துர மருப்பில் தெண்டிரை எறியும்
சிப்பி வயிற்றில் ஒளி
மின்னிக் குமுறும் கொண்டல் கொடுப்பில்
விளைநித் திலமெல்லாம்
விலையும் தரமும் பகரப் படுவன
விலையே மதிக் கொண்ணா.
பன்னும் மதலைக் குதலை மொழியொடு
பைந்தேன் சிந்திமிளிர்
பவளத் திருவாய் முத்தை விழைந்தனம்
பரிவோ டெங்கட்டு
முன்னை வினைகெட அருள்தரு கற்பகம்
முத்தம் அளித்தருளே
முக்கட் பரசிவ னுக்குத் தலைமகன்
முத்தம் அளித்தருளே.

43 வேறு

பேரார் இமயப் பிடியீன்ற
பிள்ளாய் நின்பின் பிறந்தவர்யாம்
பிள்ளை என்றே நினைஅழைக்கப்
பெருமை கொள்ளும் பிரானாரே
ஓரா மதியால் சிறியேங்கள்
உரைப்ப வற்றைப் பொறுத்தடியார்
உள்ளத் தன்பால் கூறுவதென்
றுவக்கும் தேவே! ஊற்றுமத
நீரே எமக்குப் பாலாறு
நின்வா யூறல் தேனாறு
நீடார் கோடிங் குறுத்துமென
நினையோம் நெஞ்சம் மகிழ்வோமால்
தாரார் அறுகு புனைமார்பா!
தந்தாய்! முத்தம் தருவாயே
தருசீர் மருதங் கூருடைய
தலைவா முத்தம் தருவாயே.

## 44

திருவார் இளைசைப் பெருநகரில்
சேர்ந்து வாழ்ந்த மாவணிகர்
சீர்சால் தொண்ணூற் றாரூர்க்குச்
செல்லும் போதொன் பதுகோயில்
பிரிவாய்ப் பிரிந்து தனித்தனியே
பிஞ்ஞகற்குத் தனியெழுப்பிப்
பெருமையோடு வாழவும்அப்
பிரிவுள் பிள்ளை யார்பட்டி
நிறைசால் வகையின் கோயிலின்கண்
நிலவும் அரசே! வருபவரை
நேர்கொண்டருள் வழிநோக்கி
நிற்கும் பெரும! கருதுவன
தரும்வான் தருவின் விஞ்சு கொடைத்
தருவே முத்தம் தருவாயே
தருசீர் மருதங் கூருடைய
தலைவா முத்தம் தருவாயே.

## 45

நம்பா! உனக்கின் சுவைப் பண்டம்
நான்கு தருவேன் நீயெனக்கு
நவில்முத் தமிழைத் தருகவென
நவைதீர் ஔவை கேட்டபடி
கொம்பார் நறைத்தீஞ் சுவைத்தமிழைக்
கொடுப்ப ஆத்தி சூடியுடன்
கொன்றை வேந்தன் மூதுரையும்
கூறும் நீதி நல்வழியும்
அம்பா ருலகிற் கனித்தவளை
அகவல் சொல்லித் துதித்தவளை
அரனார் உறையும் கயிலைமலைக்
கயமா கைம்மா வருமுன்னே
மொய்ம்பார் கரத்தால் சேர்ப்பித்த
முதல்வா முத்தம் தருகவே
முருகிற் சிவந்த கற்பகமா
முனியே முத்தம் தருகவே.

46

அம்மை முலைப்பா லமுதினையுண்
டருளும் பிள்ளை யார் நாவுக்
கரையர் நம்பி யாரூரர்
அணிசீர் வாத வூரரொடு
கொம்மை அடியார் ஒன்பதின்மர்
குவிசீர் சேந்த னார்மூலர்
குன்ற விலிசேர் பதினொருவர்
குன்றத் தூரா ரும்பகர்ந்த
செம்மைத் தமிழை யீராறு
திருமா முறையாத் தொடுத்திடவே
திருநா ரையூர் நம்பிக்குத்
தெரிவித் தருள்பொள் ளாப்பிள்ளாய்!
மும்மைப் புவனம் காத்தருளும்
முதல்வா முத்தம் தருகவே
முருகிற் சிவந்த கற்பகமா
முனியே முத்தம் தருகவே

47

கரிய நிறத்து மோட் டெருமை
கழனி யுழக்கத் துள்ளிவரால்
கனத்த மடியில் முட்டத்தன்
கன்றென் றுன்னி எருமையும்பால்
சொரிய அன்னக் குஞ்சுண்டு
துஞ்சும் கமலத் தொட்டிலினை
சுகமாய்த் தென்றல் தாலாட்ட
சுரும்பு முரன்று பண்பாடும்
அரிய வளஞ்சேர் மருதங்கூர்
அரசே! அரசர் தமக்குநிக
ரான நகர வணிகர்குலம்
அந்நாள் போல மீண்டும் இசை
முரசம் அறைய அருள்புரியும்
முதல்வா முத்தம் தருகவே
முருகிற் சிவந்த கற்பகமா
முனியே முத்தம் தருகவே.

48

உள்ளம் என்றும் பழனத்தில்
ஓங்கி வளர்ஆ ணவக்காட்டை
ஒழித்தும் அகங்கா ரக்கல்லை
உடைத்தும் மௌன மாம்வித்தை
அள்ளி விதைத்துப் பெரும்புனலாம்
அன்பைப் பாய்ச்சிச் சாந்தமென
அமைந்த வேலிக் குள்ஞானம்
ஆய பயிரும் வளர்ந்துமணி
கொள்ளும் பருவத் தினில்காமக்
குரோதப் புட்கள் தமைவிரட்டிக்
கொண்ட வைராக் கியத்திருந்து
கூடும் பத்தி யால்முத்தி
விள்ளும் கதிரைப் பெறஅருளும்
மேலோய் முத்தம் தருகவே
வியன் சீர் மருதங் குடிமேவும்
வேந்தே முத்தம் தருகவே.

49. வேறு

கருதும் அடியார் கவலை ஒழியக்
கருணை புரிம னத்தினன்
கனக மணியும் அணியும் நிதியும்
கவின அருள்க ரத்தினன்
சுருதி மறைகள் புகல இனிய
தமிழில் துதிசொ லிச்சொலிச்
சுரரு முனிவர் பலரும் நிதமும்
தொழுது பணிப தத்தினன்
அரனும் உமையும் அகமும் முகமும்
அலரா மலர்மு கத்தினன்
அவர்கள் இருவர் தமைமுன் அறியும்
இறையென் றுணர்க ருத்தினன்
மருத நகரில் மரவு கரியின்
மதலை தருக முத்தமே
வணிகர் மரபு வளர அருளும்
மகிபன் தருக முத்தமே

50

பிரசம் ஒழுகு மழலை மொழிகள்
பிளிறு களிறின் குமுதவாய்
பெரிய தெனவே பிறரும் மொழிய
அவர்கள் அடியின் மண்ணினில்
சிறிது நறிய கரம தனியே
சிவனு தலையைச் சுற்றிடும்
சிகரம் உயரும் இமயமலையின்
தெரிவை பருவ தத்தனைக்
கரிய மதலை கொடிய அவுணர்
அகமும் பறைய டித்திட
அணிகிண் கிணியும் கொலுசும்ஒலிசெய்
ததிர நடைப யின்றிடும்
மருத நகரின் மழவு களிறு
மகிழ அருள்க முத்தமே
வணிகர் மரபு வளர அருளும்
மகிபன் தருக முத்தமே.

## 6. வருகைப் பருவம் -51

மண்ணின்று விண்ணளா வியமலைப் பேரரையன்
மடந்தை மடி மீதிருந்து
மழலைப் பசுந்தேறல் மொழியுடுத் தம்மையின்
மனங் குளிர முத்தும் நல்கக்
கண்ணின்ற நுதலானும் கண்டோடி வந்துமிகு
காதலாய்க் குனிந்து நின்று
கண்ணின்மணி யேசுவைக் கரும்பேயென் றனக்குமுன்
கனிவாயின் முத்தம் ஈயென்
றுண்ணிற்கும் உவகையோ டுரைப்பவும் அவர்க்குமவர்
ஓங்குமுடி தாங்கி நிற்கும்
உம்பர்நதி யன்னைக்கும் செம்பவள வாய்முத்தம்
ஒருங்குறக் கொடுக்கும் வள்ளால்!
கண்ணுக்கும் எண்ணுக்கும் எட்டாப் பரம்பொருட்
கடவுள்மா மணிவ ருகவே
கற்றவரும் பற்றறுத் துற்றவரும் உட்கொளும்
கற்பகக் கனிவ ருகவே.

## 52

சீறடிய தண்டையும் கிண்கிணி சதங்கையும்
சிலம்பொடு கலந்தொ லிப்பச்
சிறுமணிகள் அரையினில் கணகணெனக் குண்டலம்
செவியில் நின் றூச லாட
நீறுணியும் நெற்றியில் பட்டமும் சுட்டியும்
நிலவி னொளி கான்று நிற்ப
நிறையுமணி யாரமும் சரப்பணி பதக்கமும்
நெஞ்சினைத் தழுவி மகிழ
கூறிளம் பிறைமருப் பிலங்குகிம் புரிமின்னக்
குவலயம் கொண்ட தொந்தி
குலுங்கிச் சரிந்தாடக் குறுநடை நடந்துநீ,
கொட்டுமத நீரில் மூழ்கிக்
கார்முகில்கள் பரவிக் களிக்குமரு தங்குடிக்
கடவுள்மா மணி வருகவே
கற்றவரும் பற்றறுத் துற்றவரும் உட்கொளும்
கற்பகக் கனிவ ருகவே.

## 53

ஓராழி கரமேந்தும் நீராழி வண்ணனார்
ஒருகேழல் வடிவு தாங்கி
உலகேழும் குடைந்துகீழ் அண்டத்தை யுங்கீண்டி
ஓங்கு பெருஞ் சோதி யானோன்
ஏராரும் பதமலர் தேடியும் காணாமல்
எய்த்துக் களைந்து நிற்ப
எழில்மருதங் கூரிருள் தருணகிரி செல்லுதற்
கேற்றதோர் பாதை யாகப்
பேராரும் பொறியியல் வல்லுநர்கள் தமின்மிக்க
பெருந்திறல் படைத்த தென்னப்
பேருலகு பாராட்டச் சுரங்கவழி யமைத்திட்ட
பெருமைசால் ஊர்தி யான
காராகு மீதேறிக் கண்ணுதற் கண்டுவரும்
கடவுள்மா மணி வருகவே
கற்றவரும் பற்றறுத் துற்றவரும் உட்கொளும்
கற்பகக் கனிவ ருகவே.

54

இப்புவியில் கவலையற வாழுதற் குறுபொருள்
ஈட்டவழி காட்ட வேண்டும்
ஈட்டுபொருள் தன்னைநல் வழியினில் பயனாக்க
இயைந்தமதி தரவும் வேண்டும்
ஒப்புயர்வில் மதியினால் நல்லநூல் பலவும்கற்
றுணர்ந்தொழுகி நிற்றல் வேண்டும்
ஒழுக்கத்தின் உயர்வினால் உள்ளத்தில் அன்புநீர்
ஊற்றெடுத் தோட நின்மேல்
செப்பரிய செந்தமிழ்த் துதிபாட நீயதைச்
செவியாரக் கேட்டெ னக்குத்
திருவருள் புரிந்திடற் கொருநொடியில் வரவேண்டும்
திருவீங்கைக் குடியில் மேவிக்
கப்புபுகழ் கொண்டபதி கணபதி குணபதி
கருணையம் பதிவ ருகவே
கற்றவரும் பற்றறுத் துற்றவரும் உட்கொளும்
கற்பகக் கனிவ ருகவே.

## 55 வேறு

புவனம் அனைத்தும் கருவுறாது
பூத்த இமயப் பொருப்பரையன்
புதல்வி மடிமஞ் சத்திருந்து
புழைக்கை நீட்டி உயர்கயிலைச்
சிவனார் செம்பொன் முடியிருக்கும்
தெய்வ நதியின் நீரள்ளிச்
சீத மதியின் உடல் நனையத்
தெளித்துச் சிரித்து விளையாடிக்
கவன மாக அறுகெடுத்துக்
கலைமான் வாயில் இனிதூட்டி
கடுநஞ் சுமிழும் அரவாட்டிக்
களிக்கும் களிறே அன்பருளத்
தவளத் தவிசில் வீற்றிருக்கும்
தந்தாய் வருக வருகவே
தந்தப் பிறைகொள் கற்பகமாத்
தந்தி வருக வருகவே

## 56

மன்னர் தமக்கு நிகராக
வாழ்சீர் வணிகப் பெருமக்கள்
மரபில் பிறந்த பெண்கள்சிலர்
மணமா காமல் வறுமையினால்
கன்னிப் பெண்க ளாயிருந்தே
காலம் கழித்தல் முறையாமோ
கருதும் அவர்கள் திருமணத்தைக்
கடிதில் முடிக்கும் கருத்தோடு
பொன்னை மணியைக் கேளாமே
பொருளை எண்ணிப் பாராமே
பொருந்து மனத்தோ டினிதுமணம்
புரியக் காளை யர்க்குமனம்
தன்னைத் தரவே உதவுபெருந்
தகையே! வருக வருகவே
தந்தப் பிறைகொள் கற்பகமாத்
தந்தி வருக வருகவே

## 57

பொன்னார் மேனிப் புண்ணியனும்
பொருப்பில் முளைத்த பூங்கொடியும்
பொருந்தி யுள்ளம் மகிழ்வெய்தப்
பூத்த பிள்ளை யேவருக.
மின்னார் மருப்பால் கயமுகனை
வீழ்த்திச் சுரர்க்கு வாழ்வளித்த
மேலோய்! வருக ஆறிரண்டு
விழிசேர் முருக வேளினுக்கு
முன்னோய்! வருக முன்னைவினை
முடிப்பாய், வருக பழமறையின்
முதலே! வருக மும்முதற்கும்
மூலப் பொருளாத் திகழ்ந்தொளிரும்
தன்னே ரில்லா மருதங்கூர்த்
தலைவா! வருக வருகவே
தந்தப் பிறைகொள் கற்பகமாத்
தந்தி வருக வருகவே.

58

கண்ணே! வருக! கண்ணுடையார்
கருத்தில் விளையும் சிவானந்தக்
கனியே! வருக கனிமொழியால்
கசிந்துள் ளுருகிப் பரவுதமிழ்ப்
பண்ணே! வருக பண்ணின்மொழிப்
பாவை நல்லாள் மலைமடந்தை
பாலா! வருக பாலுண்டு
பாரில் சைவப் பயிர்தழைய
விண்ணார் அமுதத் தினுமினிமை
மிக்க தமிழைப் பொழிகுழவி
மேகம் தனக்குத் துணையான
மேலோய்! வருக வளமிகுந்த
தண்ணார் பொழில்சூழ் மருதங்கூர்
தலைவா வருக வருகவே
தந்தப் பிறைகொள் கற்பகமாத்
தந்தி வருக வருகவே.

## 59. வேறு

வதுவை விழையும் மகளிர் பலரும்,
மலடு விரைவில் கழியவே
மகவை அடைய மனதில் விழையும்
வயதில் பலரும், வறுமைபோய்
அதிக நிதியை எளிதில் அடையும்
நினைவில் பலரும், மெய்ம்மையாம்
அறிவு வளரும் கலைகள் பயிலும்
அறிஞர் பலரும் குழுமியே
துதிசெய் தடிகள் நறிய மலரொ
டினிது தொழுது பரவிடத்
துயர்கள் அகல, அவர்கள் நலமும்
சுகமும் உறநன் றுதவுசீர்
மதியும் நிதியும் கதியும் அருளும்
மழவு களிறு வருகவே
வளமை தழுவு மருத நகரின்
மகிபன் வருக வருகவே

உருகும் அடியர் இதய ஒளிதந்
துலவு களிறு வருகவே
உலகு முழுதும் இனிது தழைய
உதவும் அமுதம் வருகவே
கருதும் வினைகள் எளிதில் முடிய
அருளும் கடவுள் வருகவே
கனக சபையில் நடன மிடுபொற்
கழலன் மதலை வருகவே
அருமை பெருமை இனிமை கமழும்
அழகு தமிழில் உனதுபொன்
அடியில் அடியன் புனையும் தெரியல்
அணிகொண் டருள வருகவே
மருவி அரிவை யிருவர் மகிழும்
மகிழ்நன் வருக வருகவே
வளமை தழுவு மருத நகரின்
மகிபன் வருக வருகவே.

## 7. அம்புலிப் பருவம் -61

பேர்கொண்ட தாயர்கள் வாவென் றழைப்பவும்
பெருங்கருணை யோடு வந்த
பிள்ளையிவன் வானுலவி வருகின்ற நீயுமோர்
பிள்ளைமதி என்ப தாலோ
கார்கொண்ட மண்டலத் தூடுருவித் தண்ணொளி
காட்டியிம் மாநி லத்தின்
கண்ணுறையு மாந்தர்க்கும் விண்ணுறையும் தேவர்க்கும்
களிப்பருள் தண்மை யோர்ந்தோ
நேர்கொண்ட கண்ணுதற் கடவுள் செஞ் சடையினில்
நிறைமலர்க் காட்டி னூடே
நிலவுநின் உடலெலாம் நறுமணம் கமழ்கின்ற
நேர்த்தியைக் கண்டு கொண்டோ
ஆர்வங்கொண் டுன்னையும் விளையாடக் கூவினன்
அம்புலீ யாட வாவே
அற்புதப் பெருஞ்செல்வக் கற்பகப் பிள்ளையுடன்
அம்புலீ யாட வாவே.

62.

காருள்ள இருளகன் றிடஉள்ள மெய்யொளி
காணவும் இனிது வருவாய்
காதலுறும் இளையவர் களிக்கடல் திளைத்திடக்
கனிவுறும் உதவி தருவாய்
ஏருள்ள வனிதையர் எருவிட் டிறைஞ்சவும்
இன்னருள் புரிந்து மகிழ்வாய்
எம்பிரா னாற்க்குமோர் செம்பதுமக் கண்ணென
இயம்பக் களித்து வருவாய்
சீருள்ள செந்தமிழ்க் கவிஞரின் கற்பனைத்
திறமைகாண் பருவம் உறுவாய்
செப்பிடின் நின்செய்கை யாவுமிப் பிள்ளையின்
செயலினை நிகர்ப்ப தால்அன்
பாருள்ளத் தோடுனை விளையாட அழைத்தனன்
அம்புலீ யாட வாவே.
அற்புதப் பெருஞ்செல்வக் கற்பகப் பிள்ளையுடன்
அம்புலீ யாட வாவே.

63.

திகழும்ஆ வணித்திங்கள் வளர்பிறைச் சதுர்த்தியில்
தெரிவைமார் நோன்பு கொள்ளத்
தேர்வாரும் தேர்ந்தநோன் பினைமுடிவு செய்வாரும்
திருக்கோயில் வந்தி றைஞ்சப்
புகலுமா மறையொலியும் திருமுறை முழக்கமும்
பூசைமணி, ஒலிமு ழக்கும்
பொன்னுலகை யெட்டவும் விண்ணவரும் வந்துளார்
பொன்னிலவு நீயும் வந்தால்
மிகுசுவைப் பொங்கலும் அப்பமொடு மோதகம்
மெதுவடை கதலி தெங்கும்
மேலான பிரசாதம் ஏராள மாயுள
வேணளவு புசிக்க லாங்காண்
அகிலமும் தொழும் ஐயன் அருளும் உறும் ஆதலால்
அம்புலீ யாட வாவே
அற்புதப் பெருஞ்செல்வக் கற்பகப் பிள்ளையுடன்
அம்புலீ யாட வாவே.

## 64.

முழுமதி யன்ஆனநீ இளமதிய னாகிப்பின்
முகம்மறைவை மதியில் ஓர்நாள்
மூதுலகில் மறையாமல் முழுஞான பானுவாய்
முகமலர்வன் என்றும் இவனே
செழுமணிமி டற்றெந்தை கண்ணெனத் திகழ்வைநீ
சிவனாரின் கண்ணின் மணியாச்
சிறந்தோங்கி யிருப்பனிவன் விரைந்தோடி வருபாந்தன்
சினத்தினுக் கஞ்சி வான
வழியெலாம் திரிவைநீ மெய்யெலாம் கலனென
வாளரவு தனைய ணிந்தும்
மணியுதர பந்தன மெனக்கொண்டும் மகிழ்வனிவன்
மற்றிவனை நிகர்ப்பை யோநீ
அளிமிகும் கருணையால் விளையாட அழைத்தனன்
அம்புலீ யாட வாவே
அற்புதப் பெருஞ்செல்வக் கற்பகப் பிள்ளையுடன்
அம்புலீ யாட வாவே.

## 65.

இரவோ னெனத்திரிவை யல்லாமல் அடியவர்
இரவினை யொழிக்க அறியாய்
இருட்புறம் போக்கும்நின் ஒளியினால் அகங்கொண்ட
இருளினைப் போக்க உணராய்
சுரலோகத் தார்க்கமுதம் ஈவையே அல்லாமல்
தொல்லடிமை பூண்ட பேர்க்குத்
தூயதிரு வருளமுதம் நல்கவல் லாயல்லை
சொரிநறைக் குமுத மலரை
விரியவைப் பாயன்றி அன்புறும் இதயமலர்
விரியவைத் திடவல் லையோ
விளம்பிடின் எவ்வகையி னாலுமிவர்க் கொப்பிலாய்
வேதமுனி எண்ணா யிரன்
அறுகுகொண் டேபணிய குளிருமுகத் தந்தியுடன்
அம்புலீ யாட வாவே
அற்புதப் பெருஞ்செல்வக் கற்பகப் பிள்ளையுடன்
அம்புலீ யாட வாவே.

66.

சிவன்கொண்ட சினத்தினால் சேடனார்க் குறுதுயர்
தீரவருள் தந்த வன்காண்
சேந்தனை வேந்தனிடு சிறையழித் துக்காத்த
திருக்கரம் உடைய வன்காண்
பவங்கொண்ட சாகரம் கடப்பதற் குறுதுணைப்
பதமலர் தருப வன்காண்
பனிகொண்ட நீர்நிலையில் உறுகண்டத் தினில்எனது
பாலனுயிர் காத்த வன்காண்
நயங்கொண்ட மலைநாட்டில் தெருக்கடைக் குழிவீழ்ந்த
நம்பியையுங் காத்த வன்காண்
நம்பிக்கை கொண்டெங்கள் தும்பிக்கை அண்ணலை
நண்ணிடின் அரவி னைக்கண்
டவங்கொள்ளும் அச்சமறக் காத்தருள்வன் ஆதலால்
அம்புலீ யாட வாவே
அற்புதப் பெருஞ்செல்வக் கற்பகப் பிள்ளையுடன்
அம்புலீ யாட வாவே.

67.

பொன்வெள்ளி இரும்பினால் ஆயபெருங் கோட்டைசேர்
புரமூன்றும் சிரித்தெ ரித்த
புண்ணியர்க் காகவிண் ணவர்செய்த தேரச்சு
பொடியுறச் செய்த தீரன்
தன்னைமதி யாதஓர் மதுரைநகர்ப் பள்ளியின்
தலைமையா சிரிய ருக்குத்
தக்கபடி பாடங்கற் பித்திடப் பள்ளியைத்
தழற்கிரை யாக்கி வைத்தோன்
முன்னம்நீ அண்ணலை எள்ளிநகை செய்ததும்
முனிவுகொண் டவன் சபிக்க
முகத்தொளி குன்றியது பின்னரொளி பெற்றதும்
முற்றிலும் அறிவை யன்றோ ?
அன்னவன் அழைத்தனன் இன்னமும் சுணங்காமல்
அம்புலீ யாட வாவே
அற்புதப் பெருஞ்செல்வக் கற்பகப் பிள்ளையுடன்
அம்புலீ யாட வாவே.

## 68.

தழைவிரி கடுக்கையந் தாரினைச் சூடிமகிழ்
    தனிமுதற் சடையின் மீது
தவழ்கின்ற நின்னையும் முன்னைநாள் இற்றதோர்
    தந்தமுறு குறையென் றெண்ணிப்
புழைநெடுங் கரத்தினால் பற்றிப் பொருத்துமெனப்
    புலம்பிடேல் வழுதி மன்னன்
புகன்றநை டதநூலின் முதற்காப்புச் செய்யுளில்
    புனைந்தகற் பனைதான் அஃது
விழையுமெய் யன்புடன் வன்னிமந் தாரைமலர்
    விரவும்அறு குங்கை சேர்த்து
விரைமலர்த் தாளினில் பூசனைசெய் வார்க்கிந்த
    மேதினியில் நன்மை பலவும்
அறிவில்பே ரின்பமும் அருள்கின்ற முதல்வனுடன்
    அம்புலீ யாட வாவே
அற்புதப் பெருஞ்செல்வக் கற்பகப் பிள்ளையுடன்
    அம்புலீ யாட வாவே.

## 69.

காசினியில் எங்கணும் காணாத வண்ணமாய்க்
    கனசிற்ப போடி யற்றும்
கணபதிநல் ஓமத்தில் கடிகமழ் சமித்தோடு
    காராவின் நெய்சொ ரிந்து
பூசுரர்கள் மறையோதி வளர்க்கின்ற அங்கியில்
    பூமலர் கனிகள் தெங்கும்
பொரிகடலை மோதகம் ஆயபல் பொருள்களும்
    புனைது கிலும் ஆகுதிசெய
வீசுபுகை முகிலுருவி விசும்பெலாம் பரவநின்
    விழியில்நீர் மல்க லால்விண்
வீதிவழி மறைக்கநீ திசைதப்பி னாயென
    வினவுமிவற் குரைத்து வைத்தோம்
ஆசுவா ராவண்ணம் இனியும்நீ சுணங்காமல்
    அம்புலீ யாட வாவே
அற்புதப் பெருஞ்செல்வக் கற்பகப் பிள்ளையுடன்
    அம்புலீ யாட வாவே.

## 70. வேறு

சங்கொடு சக்கரம் தங்கு கரத்தனும்
    தாமரை மலரானும்
சசிமகிழ் கேள்வனும் சண்முக வேளும்விண்
    டலமுறு தேவர்களும்
பொங்கு சினத்தொடு காமம் அவித்துமைம்
    புலனைவெல் முனிவோரும்
பூதக ணாதியர் யாவரும் குறித்த
    பொழுதினில் வந்தனரே
இங்கிவன் நின்னையும் சுட்டி யழைத்தனன்
    ஏதோ நற்காலம்
இனியுன் கவலைகள் அனைத்தும் மறைந்திடும்
    இரவிமுன் னுறுபனி போல்
ஐங்கரக் கற்பகத் தந்திமுன் இப்பொழு
    தம்புலீ வருவாயே
அமுதம் உகுத்திடு கலைகள் விரித்துநீ
    அம்புலி வருவாயே.

## 8. சிற்றில் பருவம் -71.

வளரும் சிமய இமயமலை
    மங்கை வாரி யெடுத்துன்னை
    மடிமீ திருத்திச் சீராட்டி
    வளமார் முலைப்பா லமுதூட்டிக்
குளிர்வான் உலவும் அம்புலியைக்
    கூவி விளையாட் டுக்காட்டிக்
    குஞ்சி திருத்தி வெளியில் விடக்
    குலவி ஓடி யாடுமழ
களிறே! சிறியேம் தேனாற்றின்
    கரையில் உள்ள மணல்எடுத்துக்
    கட்டி யமைக்கும் சிறுவீட்டைக்
    காலால் அழித்தல் முறையாமோ?
தெளிவார் மனத்தில் களிகூட்டும்
    தேனே! சிற்றில் சிதையேலே
    சிறுகட் தறுகட் கற்பகமாச்
    செல்வா! சிற்றில் சிதையேலே!

## 72.

அறிவில் திருவில் புகழில்எமக்
காரும் ஒப்பார் இலையென்றும்
அனைத்தும் எம்பே ராற்றலினால்
அமைந்த தென்றும் இறுமாப்போ
டறைவார் தருக்கும் ஆணவமும்
அடக்கி யுன்றன் வலிமையினை
அவர்கள் உணரும் படிசெய்தல்
அழகாம் அன்றி யாதொன்றும்
அறியாப் பேதை மார்நாங்கள்
அமைக்கும் சிறிய வீட்டினைநீ
அழித்தல் சரியோ அடர்த்து வரும்
அவுணப் படையைப் பெருங்காற்றில்
சிறுதூள் என்னச் சிதறடிக்கும்
திறலோய் சிற்றில் சிதையேலே
சிறுகட் தறுகட் கற்பகமாச்
செல்வா சிற்றில் சிதையேலே

## 73.

குளிரும் பசிய பொழில்சூழும்
கோயிலூரில் மடம் நிறுவிக்
கொற்ற வாளீ சுரரோடு
குலவும் திருநெல் லைத்தாயின்
அளியார் கருணைக் கடலாடி
அடியார்க் கறிவும் அமுதும்அளித்
தருள்சேர் முத்து ராமலிங்க
அடிகட் கழியாப் பேரின்பம்
கொளநல் வீடு கொடுத்தாய்நீ
கொம்மைச் செம்மைத் தமிழிலவர்
கூறும் துதியும் கொண்டாய்நீ
கொள்ளக் கொடுக்க அறிகில்லாத்
தெளிவில் மதியேம் பிழை பொறுத்துத்
தேவா சிற்றில் சிதையேலே
சிறுகட் தறுகட் கற்பகமாச்
செல்வா! சிற்றில் சிதையேலே.

74.

முன்னம் நின்னை அழையாமல்
முயன்றோம் வீடு கட்டவென
முனிபேல் முழுதும் கட்டியபின்
மும்மை உலகும் தொழுதேத்தும்
உன்னை அழைத்துக் குடிபுகுதற்
குன்னி யுள்ளோம் அக்காலை
உண்ண ஆறு சுவையுண்டி
உவந்து தருவோம் தண்பழனம்
துன்னித் துள்ளு கயல்தாவித்
தூவா னேறி யாங்குள்ள
சுடர்மீன் கட்குச் செந்தமிழைச்
சொல்லிக் கொடுத்து மீண்டுவந்து
செந்நெற் சாய்க்கும் திருநாடா
சிறியேம் சிற்றில் சிதையேலே
சிறுகட் தறுகட் கற்பகமாச்
செல்வா! சிற்றில் சிதையேலே.

75.

தேசம் முழுதும் சென்றுபொருள்
தேடிக் கொணரும் மாவணிகர்
சிறந்த தான தருமங்கள்
செம்மை யாகச் செயஅவர்க்கு
மாசில் மனமும் எந்நாளும்
வற்றா நிதியும் வழங்கத்தன்
மணிக்கை யிரண்டும் அவர்க்காக
வைத்து மற்றைக் கரமிரண்டும்
வீசு துதிக்கை யுங்கொண்டு
விண்ணும் மண்ணும் பராவு புகழ்
மிளிரும் திருவீங் கைக்குடியில்
மேவி அடியார்க் கருள்கூரும்
தேசி விநாய கப்பெரும!
சிறியேம் சிற்றில் சிதையேலே
சிறுகட் கறுகட் கற்பகமாச்
செல்வா! சிற்றில் சிதையேலே.

76.

ஆசை பெருகச் சினம்பெருக
அதனால் மதியீ னம்பெருக
அகந்தைப் பெருக்கால் பூசல்புரி
அரக்கத் தனத்தை · ஒழித்துன்றன்
பூசை மறவா முனிவர்களும்
பொன்னாட் டவரும் நனிவாழப்
பொருந்து குடிலும் மாளிகையும்
பொலிவுற் றிலங்க அருளியவன்
ஆசை பற்றி விளையாட
அடியேம் மகிழச் சிறியமனை
அமைக்க உதவின் மிகையாமோ
அடியார் அகத்தின் இருள்போக்கும்
தேசு மணியே! சிவக் கொழுந்தே!
சிறியேம் சிற்றில் சிதையேலே
சிறுகட் தறுகட் கற்பகமாச்
செல்வா! சிற்றில் சிதையேலே!.

77.

அகிலத் தெல்லா உயிர்களையும்
அல்லல் உறாமல் காப்பவன்நீ
அன்பால் நெக்கு நெக்குருக
அடியார் உள்ளத்தில் நிற்பவன்நீ
ககனத் துலவும் மதிதீண்டும்
கனக மாட மாளிகைகள்
கட்டும் வணிகர் குலம்வாழக்
கருணை புரியும் கடவுளும்நீ
மகிபா! சிறியோங் களின்புதிய
மனைக்கு வாவா என்றுன்னை
வருந்தி அழைத்தோம் சிறுகுறும்பு
வந்தாங் கியற்றேல் பலவகையாத்
திகழ்சீர் உணவும் தருவேம்யாம்
தேவா! சிற்றில் சிதையேலே
சிறுகட் தறுகட் கற்பகமாச்
செல்வா! சிற்றில் சிதையேலே.

78.

அருமா மறையும் மறையவனும்
அமரர் கோனும் நாரணனும்
அறிதற் கரிய முதற்பொருளே!
அடியார் அன்பு மீக்கூரக்
கருதி நின்றன் திருவுருவை
களிமண் ணிலும்நல் மஞ்சளிலும்
காரா வின்கோ மயத்தினிலும்
கடிதில் அமைக்க எளிதில்எழுந்
தருளி வருசெங் களிற்றோனே!
அன்னார் புரிமங் கலவினைகள்
அனைத்தும் சுபமாய் முடிப்பவனே
அன்பும் பண்பும் நிறைவணிகர்
திருவும் கலையும் பெற அருளும்
தேவே சிற்றில் சிதையேலே
சிறுகட் தறுகட் கற்பகமாச்
செல்வா சிற்றில் சிதையேலே.

79.

தானே பிரமம் எனநினைந்த
சனக மன்னன் அரண்மனையில்
சமைத்த உணவு முழுவதையும்
தானி யங்கள் அனைத்தினையும்
நானா விதமாம் பொருள்களையும்
நாழிப் பொழுதில் உண்டாலும்
நண்ணும் பசிதான் அடங்காமல்
நவைதீர் திரிச ஏற்கினிய
மானேர் விழியாள் விரோசனையின்
மனையில் அறுகை உண்டுபசி
மாறிப் பிரம தத்துவத்தை
மன்னற் குரைத்த பெருமானே
தேனார் பொழில்சூழ் மருதங்கூர்
தேவா! சிற்றில் சிதையேலே
சிறுகட் தறுகட் கற்பகமாச்
செல்வா சிற்றில் சிதையேலே.

80.

கடநீர் ஊற்றும் பெருமத்த
கத்தைப் பொருதும் தனத்தினராம்
காரி கையர் யாம்என்று
கருதிக் கறுவேல் மெய்யாக
அடலார் தும்பிக் கைபோல
அழகார் உரோம வரிசையுறும்
அரிவை மாரும் யாம்அல்லேம்
புடமார் சொக்கத் தங்கமெனப்
பொலியும் நின்றன் சேவடியெப்
போதும் மறவாத் தனவணிகர்
பொற்பார் குலத்தில் பிறந்தவர்காண்
திடமாய் நீயே துணையென்று
தேர்ந்தோம் சிற்றில் சிதையேலே
சிறுகட் தறுகட் கற்பகமாச்
செல்வா சிற்றில் சிதையேலே.

## 9. சிறுபறைப் பருவம் -81.

மைத்தடங் கருவிழிச் சிறுமியர்கள் விளையாட
மண்ணினில் அமைத்த சிற்றில்
வலிமையுறு காலினால் சிதைக்கவரு வான்போல
வந்துசிறு குறும்பி யற்றிக்
கைத்தலத் தாற்பெரு மரக்கிளை ஒடித்துமனை
கட்டுதற் குதவி செய்து
கார்குழற் பேதையர் பேரன்பி னோடுகாய்
கறிவகைகள் ஆக்கி நல்கும்
புத்தமுதம் உண்டுதன் தாயர்கள் தரும்உணவு
போற்சுவை படைத்த தென்னப்
புகர்ந்துபா ராட்டியன் னார்விரைவில் மணமுறைப்
புழைக்கரம் தூக்கி ஆசி
சித்தமகி ழத்தரும் மத்தகயத் தண்ணல்நீ
சிறுபறை முழக்கி யருளே
திருவீசர் மனமகிழ வருதேசி விநாயகன்
சிறுபறை முழக்கி யருளே.

## 82.

விரிக்கின்ற பெரும்புகழ்ச் சிறாவயலில் நடைபெறும்
விழாமஞ்சு விரட்டில் மேலாம்
விடையேற் றினங்கள்கம் பீரமாய் வருகின்ற
வேளையில் பாய்ந்து வந்து
மறிக்கின்ற காளையரை எதிர்த்துமுட் டித்தள்ள
வடித்தகூர்க் கொம்ப சைக்கும்
மாட்டினைப் பிடித்துற்ற வேட்டியைக் கைக்கொண்டு
வாகைபுனை வீரர் தம்மை
நெருக்கிவரும் குழுவினர் புகழ்ந்துபா ராட்டுமொலி
நீள்கடல் ஓதை விஞ்ச
நெஞ்சக் களிப்பினால் வஞ்சியர்கள் சிந்துகண்
ணீருனது பதம்ந னைப்பச்
சிரிக்கின்ற வெங்கோட்டுத் தண்ணருட் செங்களிறு
சிறுபறை முழக்கி யருளே
திருவீசர் மனமகிழ வருதேசி விநாயகன்
சிறுபறை முழக்கி யருளே.

## 83.

கார்முகில் முழக்கெனக் கலாபமயில் ஆடவும்
கானரிக் குருளை செய்யும்
கர்ச்சனை முழக்கெனக் களிற்றினம் பிளிறவும்
கடுவுண்ட தியாகேசரின்
தேர்வடம் பிடித்துவெகு ஆர்வமுடன் இழுப்பவர்
செயும்ஆர வார மென்னத்
திருவைந் தெழுத்தோதும் அடியார்கள் அரகரா
சிவசிவா என்று ருகவும்
பார் முழுதும் சென்றுபொருள் தேடிக்கொணர்வணிகர்
பணைக்கொடை முரசம் என்னப்
பலபேரும் வந்துதரு மங்கேட்டு நிற்பவும்
பலாவெடித் தோடு தேனால்
சீர்வயல்கள் செழிப்புறும் திருவீங்கைக் குடிநாதன்
சிறுபறை முழக்கி யருளே
திருவீசர் மனமகிழ வருதேசி விநாயகன்
சிறுபறை முழக்கி யருளே.

## 84.

சித்தம்அரன் பால்வைத்து நித்தமும் பூசனைசெய்
சேரமான் மன்னருக்குச்
சிற்றம் பலத்தாடும் செம்பொற் பதத்தில்அணி
சிலம்பினொலி கேட்கும் வண்ணம்
நத்தியருள் தரும்ஈசன் கைத்தலத் துற்றதுடி
நாதமென் றெண்ணி மாலும்
நான்முகனும் இந்த்ராதி தேவரும் ஞானமுற
நற்றவத் துற்ற பேரும்
சத்தம்வரு திசைநோக்கி பத்தியுட னேசிரம்
தாழ்த்திப் பணிந்து நிற்பத்
தங்கச்செங் கோலொன்று செங்கரத் தினிற்கொண்டு
தண்டண்டண் டண்டண் டென்னச்
சித்தியொடு புத்தியும் சேரஅருள் நாயகன்
சிறுபறை முழக்கி யருளே
திருவீசர் மனமகிழ வருதேசி விநாயகன்
சிறுபறை முழக்கி யருளே.

## 85.

கலையாரும் முழுமதியைக் கண்டுளம் களிகூரக்
கத்துகடல் அலைமு ழக்கும்
கடல்நீரை மொண்டுண்டு கொண்டலொன் றோடொன்று
கலித்திடித் திடுமு ழக்கும்
மலையாரும் புகழ்கொண்ட வள்ளல்அழ கப்பர்பால்
வந்துகொடை பயின்ற மேகம்
மறவாமல் மாவணிகர் வாழ்கின்ற பதியெலாம்
மழையாகப் பெய்மு ழக்கும்
தலையாய மாவீரன் நேதாஜி படையினர்
சலோடில்லி யெனுப்பு கன்ற
சமர்க்கள முழக்கமும் கேட்டியாம் மகிழ்ந்துளோம்
தங்கமலை தன்னை யீசன்
சிலையாக வளைத்துநாண் பூட்டுமொலி போலநீ
சிறுபறை முழக்கி யருளே
திருவீசர் மனமகிழ வருதேசி விநாயகன்
சிறுப்பறை முழக்கி யருளே.

86.

பூரணமும் அரிமணமும் பெரியோர்கள் இனிதிடப்
　　பொங்குபெரு மகிழ்வி னோடு
பூரித்த மணநம்பி நங்கையின் கழுத்தில்திருப்
　　பூட்டுசுப வேளை தன்னில்
மாமுரச மாய்க்கெட்டி மேளமும் முழங்கவே
　　மணமக்கள் இதயம் பூவாய்
மலர்ந்தின்ப முரசினைக் கலந்தொன்றாய்க் கொட்டவும்
　　வண்டமிழ் வாணர் வாழ்த்தி
நாமருவக் கவிபாடித் திண்டிமம் முழக்கவும்
　　நக்ரம்சிற் றூர்கள் எங்கும்
நலமோங்க மணவிழா முழக்கமாய் நிறைசெட்டி
　　நாட்டிலுயர் வணிகர் நாளும்
சேமமுறத் திருவருள் பாலிக்கும் செங்களிறு
　　சிறுபறை முழக்கி யருளே
திருவீசர் மனமகிழ வருதேசி விநாயகன்
　　சிறுபறை முழக்கி யருளே.

87. வேறு

அடல்மிகு மத்தக் களிறுகள் எட்டும்
　　அஞ்சிப் பிளிறாமே
அவனி சுமந்திடும் அரவின் செவிப்பறை
　　அதிரக் கிழியாமே
தடவெளி முகடு வெடிபட விண்மீன்
　　தவறிச் சிதறாமே.
தண்ணில வுமிழது வெண்மதி செல்லும்
　　தடமும் பிறழாமே
கொடுமுடிக் கோட்டில் எதிரொலி கேட்டுக்
　　குவலயம் பதறாமே
கோகந தக்கை யிற்சிறு கழியைக்
　　கொண்டு மெல்லெனவே
முடிகள் துளக்கிச் சிவன்மகிழ் கூர
　　முழக்குக சிறுபறையே
முற்பவ வினைதீர் கற்பகக்களிறு
　　முழக்குக சிறுபறையே

## 88.

காலை எழுந்து புனலிடை மூழ்கிக்
கவினுற நீறிட்டுக்
கரித்தொடு திருவைந் தெழுத்தினை ஓதி
கதிரவ னைத்தொழுது
சீலத் தொடுசிவ பூசை புரிந்து
திருமுறை யினைப்பாடி
செவிக்குள் உபதே சம்புரி குரவன்
திருத்தாள் இணை பரவி
ஞாலத் தினில்நல் வாழ்வு நடாத்தும்
நலமார் மெய்யன்பர்
நாளும் வாழத் திருவருள் புரிபவன்
நதிக்கரை குளக்கரையும்
மூலை முடுக்கும் தளிகொள மகிழ்பவன்
முழக்குக சிறுபறையே
முற்பவ வினைதீர் கற்பகக்களிறு
முழக்குக சிறுபறையே

## 89. வேறு

அடல்அவு ணப்பகை நொடியில் முடித்திடும்
மழகளிறே
அடியினை பற்றிய அமரர் செழித்திட
அருள்முகிலே
தடவரை உச்சியில் கதையெழு தித்தரும்
இறைமணியே
தனவணி கர்க்குறு துணையென நிற்குமோர்
தனிமுதலே
அடியவன் சொற்றமிழ் செவியில் மடுத்தருள்
தருநதியே
அருமறை கட்கரி தெனுமிரு பொற்பதம்
உறுபரமே
கடலொலி பிற்படக் கருதி முழக்குக
சிறுபறையே
கவின்மரு தைப்பதிக் கடவுள் முழக்குக
சிறுபறையே

90.

கருதி எடுத்திடு கருமம் அனைத்தையும்
நலமுறவே
கடிதில் முடித்திட இனிதருள் கற்பகக்
கனியமுதே
சிறுமை யொழித்துயர் குணநல முற்றநல்
முனிவர்சுரர்
தினமும்நின் பொற்பதம் வழிபட நற்பதம்
தருபரமே
அறுகின் எடைக்கெடை அளகை நகர்க்கின்ற
அளிநிதியும்
அளவினில் ஒப்பிலை யெனஅறு கைப்புனை
சிவசுதனே
கருமுகிற் கொட்டினும் அதிகம் முழக்குக
சிறுபறையே
கவின்மரு தைப்பதிக் கடவுள் முழக்குக
சிறுபறையே

10. சிறு தேர்ப் பருவம் -91.

தேவாதி தேவரும் மூவரும் யாவரும்
சிந்தைகளி கூர்ந்தி ருப்பத்
தீயசெய லேபுரியும் மாயையில் வல்லசுரர்
சித்தங் கலங்கி நிற்ப
மாவேழு வழிவந்த தனவணிகர் அன்போடு
வழிபாடு இயற்றி யின்ப
வாரியில் திளைத்திடச் சிறுபறை முழக்கியே
வந்தமும் மதவா ரணம்
காவாரும் கற்பகத் தாருவின் கிளைவெட்டிக்
கடைந்த மரங் கொண்ட மைத்த
கவினாரும் தேரின்முன் முகப்பினில் கதலியும்
கமுகும் வைத் தலங்கரித்துத்
தேவார மறையோதி வருவார்கள் உடன்வரச்
சிறுதேர் உருட்டி யருளே
திருவளர வளர்மருதங் குடிவளரும் பெருமகன்
சிறுதேர் உருட்டி யருளே.

## 92.

ஈரேழு புவனமும் தட்டாக வட்டமதி
    இரவியும் உருளை யாக
எண்டிசைப் பாலகர்கள் தூண்களாய்க் குலகிரிகள்
    எட்டுமேல் விதான . மாகக்
காராரும் மழைமுகில்கள் துகிலாக நெடியசக்
    கரவாள கிரியும் அச்சாய்க்
கழறரிய மறைநான்கும் பரிகளாய் மறையோதும்
    கடவுள் தேர்ப் பாகனாகப்
பேரார்வத் தொடுசுரர்கள் அமைத்ததேர் உருட்டாமல்
    பெருஞ்சிலை வளைத்தி டாமல்
பேரவுணர் புரமூன்றும் ஓர்நொடியில் சிரித்தெரிசெய்
    பிஞ்ஞகன் மகிழும் மைந்தன்
சீராரும் கற்பகப் பேராரும் செங்களிறு
    சிறுதேர் உருட்டி யருளே
திருவளர வளர்மருதங் குடிவளரும் பெருமகன்
    சிறுதேர் உருட்டி யருளே.

## 93.

பொதுவியர்கள் மனையினில் புகுந்துதயிர் பால்வெண்ணை
    புசித்திடக் குடமுருட்டிப்
பொருத வந்த பெருஞ் சகடனை யுதைத்துசெம்
    பொற்பதத் தாலு ருட்டி
எதிரியென வருசேனை வீரர்தலை யனைத்தையும்
    இருநிலம் பட உருட்ட
இருஞ்சிலைக் கரங்கொண்டு பெருஞ்சமர் புரிவிசயன்
    ஏறுதேர் உருட்டு மாலின்
சுதனெனும் மதவேளின் சிலையெனும் கழையினைத்
    தும்பிக்கை யால்முறித்து
தூயஅடி யார்மனத் தாசை போக்கிடச்
    சுடர்ஞான ஒளிப ரப்பிச்
சிதறிவெம் பழவினைகள் கதறிட உருட்டுபவன்
    சிறுதேர் உருட்டி யருளே
திருவளர வளர்மருதங் குடிவளரும் பெருமகன்
    சிறுதேர் உருட்டி யருளே.

## 94.

மருவுபுகழ் விநாயக சதுர்த்திநல் விழாவினில்
வானு மண்ணுலகும் ஏத்தி
மாக்கடல் போல்ஆர்ப்ப வெள்ளிமூ டிகத் துடன்
வாலுளை மடங்கல், பூதம்.
பிரசம்ஒழு குங்கமலம் நுரைதிகழ் விடையேறு
பிளிறுமால் யானை தங்கப்
பெருச்சாளி நீலச் சிகண்டிபாய் மாவெனும்
பேருந்தி பலவும் ஏறித்
திருவுலாப் போந்தடியர் மனமெலாம் களிகூரச்
சிவசிவா என்ன ஓதித்
தேர்வடம் தொட்டிழுப் பவர்கள்மனை யகமெலாம்
திருமங்கை தங்க அருள்வான்
திருமணித் தேரேறி வருகின்ற மழகளிறு
சிறுதேர் உருட்டி யருளே
திருவளர வளர்மருதங் குடிவளரும் பெருமகன்
சிறுதேர் உருட்டி யருளே.

## 95.

மாமருவு காரையம் பதிமருவு வணிகர்நன்
மரபினில் வந்து தித்த
மாதவத் துயர்சிதம் பரஞான தேசிகன்
மைந்தனின் மைந்த னாம்யான்
பூமருவு மலைநாடு பொருள்தேடச் சென்றநான்
புகழ்மருவு நேதா ஜியின்
புகலுசீர் விடுதலைப் படையினில் சேர்ந்துபணி
புரிந்துபுகழ் பெற்ற வீரன்
தேமருவு தீக்கைதந் துதவிடும் தற்புருட
தேசிகர் இராம நாதச்
செம்மல்பால் தீக்கைபெற் றநுதினமும் சிவபூசை
செயும் தேவராயன் அன்பால்
தேமதுரத் தமிழினில் இப்பருவம் செப்பினேன்
சிறுதேர் உருட்டி யருளே
திருவளர வளர்மருதங் குடிவளரும் பெருமகன்
சிறுதேர் உருட்டி யருளே.

வானாகி மண்ணாகி வெளியாகி ஒளியாகி
வாழ்விக்கும் நீரு மாகி
மதியாகிக் கதிராகி மற்றுமுள கோள்களாய்
வானுடுத் திரளு மாகி
ஊனாகி உயிராகி உயிர்க்குயிர் தானாகி
உள்ளத்துள் உள்ள தாகி
ஒன்றாகிப் பலவாகி நன்றாகித் தீதாகி
உருவமாய் அருவ மாகி
நான்நான்என் றுரைப்பவர்கள் தாம்ஆர்என்றுணர்வுற்று
நண்ணுதற் கரியதாகி
நவில்கின்ற சமயங்கள் யாவும்வந் தணைய அருள்
நாயக மாகி யின்பத்
தேனாகி விளையாடல் புரிகின்ற செங்களிறு
சிறுதேர் உருட்டி யருளே
திருவளர வளர்மருதங் குடிவளரும் பெருமகன்
சிறுதேர் உருட்டி யருளே.

## 97. வேறு

பால விநாயக பத்தி விநாயக
பவள விநாயகனே
பகையை முடித்திடும் வீர விநாயக
விசய விநாயகனே
தாலம் புரந்தருள் திருவின் விநாயக
தருண விநாயகனே
சத்தி விநாயக புத்தி விநாயக
சித்தி விநாயகனே
மூலவிநாயக நிருத்தவிநாயக
மும்முக நாயகனே
முக்தி யளித்தருள் துண்டி விநாயக
உருண்டி விநாயகனே
சீலமிகுந்தன வணிகர்கள் நாயகன்
உருட்டுக சிறுதேரே
தென்மரு தூருறை தேசிவிநாயகன்
உருட்டுக சிறுதேரே.

## 98.

குறுமுனிசெங்கரம் கொண்ட கமண்டலம்
கொட்டிநீ கவிழ்த்திடவும்
குளிர்புனல் காவிரி பெருகி வளம்பல
கொழித்ததை மறித்திந்நாள்
சிறைப் டணையுற் றிரும்புனல் தேங்கிடச்
செந்நெற் பயிர்வாட
செந்தமிழ் நாட்டினர் சிந்தை கலங்கித்
தியங்குவ தறியாயோ
இறைதளி யாவிலும் மணியொலி ஆர்ப்பவும்
யாவரும் இன்புறவும்
இன்னல்கள் நீங்கி நன்னதி நீர்வர
இயைந்தநற் றுணையாவாய்
திறலவு ணப்படை சிதற முறித்தவன்
உருட்டுக சிறுதேரே
தென்மரு தூருறை தேசிவிநாயகன்
உருட்டுக சிறுதேரே

## 99.

கண்டின் சுவைத் தமிழ் காக்கும் கணபதி
உருட்டுக சிறுதேரே
கர[illegible]வி க[illegible]து[illegible] தந்திக் கணபதி
உருட்டுக சிறுதேரே
துண்டப் பிறையணி துண்டிக் கணபதி
உருட்டுக சிறுதேரே
தொல்மறை முடியமர் தொந்திக் கணபதி
உருட்டுக சிறுதேரே
சண்டக் களதம் ஊரும் கணபதி
உருட்டுக சிறுதேரே
சடுகுடு என்ன உலாவும் கணபதி
உருட்டுக சிறுதேரே
இண்டைச் சடைமுடி இறைவன் கணபதி
உருட்டுக சிறுதேரே
ஈங்கைக் குடியமர்ந் தோங்கும் கணபதி
உருட்டுக சிறுதேரே

100.

சீருலவு மார்கழித் திங்களில் ஆதிரைத்
தெரிசனம் அருளும் ஈசன்
சேவடிகள் பரவியஞ் செழுத்தோதி நீறுபுனை
செல்வர்கள் நாளும் வாழப்
பாருலகில் சைவநெறி ஆலென வளர்ந்தோங்கப்
பைந்தமிழ்த் தேன்ம ணக்கப்
பல்வளம் கொழித் தெங்கும் நல்லறம் தழைத்திடப்
பரிந்தோம்பும் வணிகர் மரபு
பேறுடன் புகழ்கொண்டு வாழவருள் கற்பகப்
பிள்ளைநின் பேரில் அன்பால்
பிள்ளைமொழி யிற்சிறியேன் பேசுபிள் ளைத்தமிழ்நின்
பெருமையால் பெருமை பெற்றுச்
சீர்ரவி ஒளியெனச் செகமெலாம் உலவிவரச்
சிறுதேர் உருட்டி யருளே
சிற்பரை மெச்சிமகிழ் கற்பகக் கனியமுது
சிறுதேர் உருட்டி யருளே.



